# ஸப்தபதி



விவாஹம் ஆறுவகை; அவற்றில் "ஆருஷ" வகை விவாஹத்தில் (வேத விதிப்படி மாதா பிதாக்களுடன் அக்னி சாக்ஷியாக நடத்தப்படுவது) மாங்கல்ய தாரணம் செய்வித்த பிறகு "ஸப்தபதி" என்று சொல்லப்படும் சம்ஸ்காரம் முடிவு பெற்ற பின்னரே விவாஹம் நிறைபெறுவதாக ஐதீகம்.

"ஸப்தபதி" என்பது மணப்பெண் வலது காலை அம்மியின் மேல் வைத்து மணமகன் இடது கையால் பிடித்துக்கொண்டு ஒவ்வொரு அடியாக மந்திரத்துடன் ஏழு அடி நகர்த்தி வைப்பதாகும். இதன் தத்துவம் யாதெனில் :

முதல் அடி - மழை முதலான கால நிலைகள் அனுகூலமாக இருப்பதற்காகவும், இரண்டாம் அடி - தானியங்களின் உற்பத்தி அதிகரித்து சுபீக்ஷம் நிலவுவதற்காகவும், மூன்றாம் அடி - விரதாதிகள் (சதுர்த்தி, சஷ்டி, ஏகாதசி, சோம வார, சனி வார முதலியன) அனுஷ்டிக்க அபிலாஷை ஏற்படவும், நான்காம் அடி - வியாதிகளின்றி ஆரோக்ய வாழ்வு அடைவதற்காகவும், ஐந்தாம் அடி - பசு முதலியவைகள் நிரம்பப் பாலை அளிப்பதற்காகவும், ஆறாம் அடி - ஆறு ருதுக்களின் அனுக்கிரஹம் பெறுவதற்காகவும், ஏழாம் அடி - சப்தரிஷிகளின் ஆசியை அடைவதற்காகவும்.

எட்டாம் அடி - சுவை மிகுந்த தித்திப்பு காரவகை பக்ஷணங்களை வாங்குவதற்குக் கடவுள் உங்களை அனுக்கிரஹிப் பதற்காகவும்.



**கல்யாண வைபவங்களுக்கு**

சீர்முறுக்கு, சீர் முள்ளுத்தேன்குழல், அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய், வகைகள் ஆர்டரின் பேரில் செய்துத் தரப்படும்.



**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்னாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020
போன் : 412557.

# தங்கபாலுவுக்கு ஷொட்டு; கோஷ்டிப் பூசலுக்குக் குட்டு!

பிரதமர் மந்திரி சபையை விஸ்தரிக்கும் போது, தங்கள் ஆட்களுக்குப் பதவி கிடைக்கும் என்று வாழப்பாடி, மூப்பனார் ஆவலோடு எதிர்பார்த்திருக்கும் வேளையில், சாமர்த்தியமாக எந்தக் கோஷ்டியையும் சாராத தங்கபாலுவை அமைச்சராக்கியதன் மூலம் கோஷ்டிச் சண்டைக்கு ஒரு குட்டு வைத்திருக்கிறார் பிரதமர். வாழப்பாடியும், ப. சிதம்பரமும், தங்களுக்கு மீண்டும் அமைச்சர் பதவி கிடைக்கும் என்று கூட எதிர்பார்த்திருக்கலாம். ஒன்றும் நடக்கவில்லை. 'தமிழகத்துக்கு காபினெட் அந்தஸ்து அமைச்சர் பதவி தரப்படவில்லையே' என்ற வாழப்பாடியின் புலம்பல் இதைக் கோடிகாட்டுகிறது. தமிழ்நாடு காங்கிரஸில் இரு கோஷ்டிகளும் பயங்கர மூட்-அவுட்டில் இருக்கிறார்கள்.

1969-ல் காங்கிரஸ் பிளவுபட்ட பிறகு, இந்திராவின் அடிபொட்டி நடந்து, இன்று வரை தலைமைக்கு விசுவாசமாக இருந்து வருகிறார் தங்கபாலு. அதோடு இளந்தலைமுறையை ஊக்குவிக்க வேண்டும் என்ற பிரதமரின் எண்ணமும் தங்கபாலுவுக்குப் பதவியைப் பெற்றுத் தந்திருக்கலாம்.

சேலம் மாவட்டத்தில் குறிச்சிபேலூர் என்ற கிராமத்தில் பிறந்தவர் தங்கபாலு. 42 வயதுதான் ஆகிறது. பத்தொன்பதாவது வயதிலேயே கட்சிப் பணிபுரிய ஆரம்பித்தவர். பெற்றோர்களுக்கு ஒரே புதல்வர். பள்ளிப் படிப்பைக் கிராமத்திலேயே முடித்தவர், மிக இளம் வயதிலேயே அரசியலில் புகுந்து விட்டாலும் ஆர்வம் காரணமாகத் தபால் மூலம், பட்டமேற்படிப்பு வரை படித்துத் தேறினார்.

மாவட்ட இளைஞர் காங்கிரஸில் நுழைந்து கடுமையாகக் கட்சிப் பணி ஆற்றி, மாநில நிலையில் உயர்ந்தவர். 1980 - 1986 கால கட்டத்தில் மாநில இளைஞர் காங்கிரஸ் தலைவராக இவர் இருந்த போது, கட்சியில் ஒரு கலகலப்பு ஏற்பட்டது. தமிழகம் முழுக்கப் பயணம் செய்து இளைஞர்களைக் கட்சிக்குள் வளைத்துப் போட்டார் தங்கபாலு. இவர் இளைஞர்களைக் கவர்ந்து வரும் வேகத்தைப் பார்த்து தி.மு.க., அ.தி.மு.க இரண்டு கட்சிகளும் தங்கள் இளைஞர் அமைப்புக்களைப் பலப்படுத்தத் தொடங்கின.

எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்த போது அ.தி.மு.க. ஆட்சியை வெகு கடுமையாக விமர்சித்திருக்கிறார் தங்கபாலு. இதனால், அப்போது அமைச்சராக இருந்த காளிமுத்து பதில் அறிக்கை விட, இவர் எதிர் அறிக்கை விட, சில நாட்களுக்கு மாலை நேரப் பத்திரிகைகளுக்கு நல்ல தீனி கிடைத்தது. ஆனாலும், எம்.ஜி.ஆர்., இவர் ராஜ்ய சபைக்குச் செல்வதற்கு அ.தி.மு.க.வின் ஆதரவைக் கொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.



ஒருவர் பின் ஒருவராக அரசியலில் புகுந்த சஞ்சய்காந்தி, ராஜீவ் காந்தி ஆகியோரைத் தமிழ்நாட்டுக்கு முதன் முதலாக அழைத்து வந்து கூட்டம் போட்டவர் தங்கபாலுதான். ராஜீவ் மரணம் அடைந்த பின், 'நரசிம்மராவ் தலைமை ஏற்க வேண்டும்' என்று தமிழ்நாட்டிலிருந்து முதல் குரல் கொடுத்தவரும் தங்கபாலுவே.

அரசியல் என்பது முழு நேரப் பணியாக இருந்தாலும் நேரம் கிடைக்கும் போது கவிதைகளும் எழுதுகிறார். 'தாயின் மணிக்கொடி' என்ற மாதப் பத்திரிகையையும் நடத்தி வருகிறார். உணவுப் பழக்கங்களில் மிகவும் கண்டிப்பானவர். காலையில் கட்டாயம் ஒரு மணி நேரம் வாக்கிங் உண்டு. டீன் ஏஜில் புகைப் பழக்கத்திற்கு அடிமையானாலும் அரசியலில் நுழைந்த பிறகு அதற்கு அறவே விடைகொடுத்தவர்.

மனைவி பெயர் ஜெயந்தி. கடந்த பாராளுமன்றத் தேர்தலில் தர்மபுரி பாராளுமன்றத் தொகுதியில் நின்று பிரமிக்கத்தக்க அளவில் வெற்றி பெற்றவர்.

"தற்போது நாடு இருக்கும் சூழ்நிலையில் காங்கிரஸ் - அ.இ.அ.தி.மு.க. கூட்டணி காலத்தின் கட்டாயம்; மறைந்த தலைவர்களான எம்.ஜி.ஆர். - ராஜீவ் காந்தி உருவாக்கிய கூட்டணி இது; இந்தக் கூட்டணியைப் பலவீனப்படுத்த நினைப்பது மறைந்த தலைவர்களை அவமானப்படுத்தும் செயல்" என்று தீவிரமாக நம்பும் தங்கபாலு, சமூக நலன் இலாகாவில் ராஜாங்க அமைச்சராக நியமிக்கப்பட்டுள்ளார்.

- ப்ரியன்



# அண்ணாவை மறந்துவிட்டார்களா?

பிப்ரவரி மூன்றாம் தேதியோடு அறிஞர் அண்ணா மறைந்து 24 ஆண்டுகள் ஆகின்ற நிலையில் அவர் இன்னும் நினைக்கப்படுகிறாரா அல்லது மறக்கப்பட்டு விட்டாரா?

சென்னைப் பல்கலைக் கழகத்தில் அரசியல் சித்தாந்தத்தைப் (Political Philosophy) பாடமாக எடுத்து எம்.ஏ. படிக்கும் ஜெ. பிரேம் பாஷானி, ஜி. மூத்து, திருமதி கண்மணி தனசேகர், பி. பிரவீன் குமார் ஆகியோர் விவாதித்தனர். அந்த விவாதத்திற்கு சென்னை பல்கலைக் கழகத்தின் அரசியல் மற்றும் பொது நிர்வாகத் துறையில் சிறப்புப் பேராசிரியராகப் பணியாற்றும் டாக்டர் சி. ஏ. பெருமாள் தலைமை தாங்கினார்.

**கண்மணி** : அண்ணாவை இன்னும் மக்கள் நினைவில் கொண்டுள்ளனர் என்றுதான் கூற வேண்டும். பணமும் பட்டமும் உள்ளவன்தான் இந் நாட்டை ஆள வேண்டும் என்கிற நிலையை மாற்றி ஒரு சாதாரணக் குடிமகனும் ஆட்சிக்கு வரலாம் என்பது நம் தேசம் சுதந்திரம் பெற்றதுமே உருவாகி விட்டது. ஆயினும் தமிழக அரசியலில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியவர் அண்ணாதான். சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட கட்சி என்ற பாரம்பரியத்தில் வந்த காங்கிரஸுக்குச் சிறந்த எதிர்க்கட்சியாகவும் பின்னர் மாற்றுக் கட்சியாகவும் விளங்கி தி.மு.க. ஆட்சியை மலரச் செய்தார். ஒரு புதிய திராவிட பாரம்பரியத்தை உருவாக்கினார். அந்தப் பாரம்பரியத்தில் வந்தவர்கள்தான் இன்றும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு நம்மை ஆள்கிறார்கள். எனவே அண்ணாவை யாரும் மறக்கவில்லை என்றுதான் ஆகிறது. வேறு என்ன நிரூபணம் வேண்டும்?



* டாக்டர் பெருமாள்

"இன்றைய நிலையில் எந்த வழிமுறைகள் மூலம் அண்ணாவைப் பற்றிய சிறப்புகளை மக்களிடையே பரப்ப முடியும் என்கிறீர்கள்?"

**மூத்து** : உங்கள் வாதத்தை ஏற்க முடியாது. மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமானால் மக்களின் இன்னல்களை உணர்ந்தவன் ஆட்சியில் அமர வேண்டும் என்று உணர்த்தியவர் அண்ணா. ஆனால்



* பிரேம் பாஷானி

"தாங்கள் மனம் வைத்தால் ஓர் ஆட்சியைத் தூக்கி எறிந்துவிட்டு வேறு ஒரு கட்சி ஆட்சியை ஏற்படுத்தலாம் என்று தங்களிடம் உள்ள பலம் வாய்ந்த சக்தியை மக்களுக்குப் புரிய வைத்தார்."



இன்றைய அரசியல்வாதிகள் இதனை மறந்து, பணத்திற்காகவும் அதிகார பலத்துக்காகவும் அரசியலையும், ஆட்சியையும் பயன்படுத்தத் தொடங்கி விட்டார்கள். மக்களுக்குச் சேவை என்பது பின்தள்ளப்பட்டு விட்டது. அதனால்தான் சொல்கிறேன் அண்ணா பாரம்பரியத்தில் வந்தவர்கள் ஆட்சியில் அமர்ந்திருக்கிறார்களே தவிர, அண்ணாவை மறந்து விட்டார்கள் என்று!

**பிரேம் :** ஜனநாயகத்தின் சிறப்பினை எளிய மக்களுக்கும் புரிய வைத்தவர் அண்ணா. நாங்கள் மனம் வைத்தால் ஓர் ஆட்சியைத் தூக்கி எறிந்து விட்டு வேறு ஒரு கட்சி ஆட்சியை ஏற்படுத்தலாம் என்று தங்களிடம் உள்ள பலம் வாய்ந்த சக்தியை மக்களுக்குப் புரிய வைத்தார். இன்றும் இந் நிலைதான் தொடர்கிறது... மக்கள், அண்ணா கற்றுத் தந்ததை மறவாமல் மறுபடி ஆட்சி மாற்றம் செய்தார்களே!

**பிரவின்குமார் :** இன்றும் இந்நிலை நீடிக்கிறது என்று ஒப்புக் கொண்டாலும், இச் சக்தியை மக்களுக்கு உணர்த்தியவர் அண்ணாதான் என்று எத்தனை பேர் நினைக்கிறார்கள்? நம்மைப் போன்ற இளையதலைமுறையினருக்கு அண்ணாவின் குண இயல்புகளையும், திறமைகளையும், சேவைகளையும், தீர்க்க தரிசனங்களையும், அவரது பாரம்பரியத்தில் ஆட்சிக்கு வந்தவர்கள் சரியாக வெளிச்சம் போட்டுக் காட்டத் தவறி விட்டனர் என்று கூறத்தான் வேண்டியிருக்கிறது!

**கண்மணி :** இவ் வாதத்தை ஏற்க முடியாது. வறுமைக் கோட்டில் உள்ள மக்களுக்காக, ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும், 'ரூபாய்க்கு ஒரு படி அரிசி' எனும் சமுதாய நலத் திட்டத்தை அண்ணா அமுலுக்குக் கொண்டு வந்தார். இன்றையச் சூழலில் அவ்வளவு மலிவாக உணவுப் பொருள் விநியோகம் செய்ய முடியாது என்றாலும் இன்றும் மக்களுக்கு அரசின் நியாய விலைக் கடைகள் மூலம் மலிவு விலையில் அரிசி மற்றும் சில அத்தியாவசியப் பொருள்கள் விநியோகிக்கப்படுகின்றனவே.

**முத்து :** ஆனால், இதற்கு அஸ்திவாரம் அமைத்தவர் அண்ணாதான் என்று இன்றைய அரசியல்வாதிகள் சொல்வதாகத் தெரியவில்லையே! இதற்கெல்லாம் மக்கள் வரிப்பணம் பயனாவதைக் கூட மறைத்து, ஏதோ தங்கள் திட்டம் போல் தங்களைப் பிரபலப்படுத்திக் கொள்ளத்தானே இலவசங்களைக் கூட வழங்குகிறார்கள்!

"ஆலய வழிபாடு அண்ணாவுக்கு ஏற்ற கொள்கையல்ல. இன்று அவரது பாரம்பரியத்தில் வந்தவர்கள் எந்த அளவுக்கு அண்ணாவின் கொள்கையைப் பின்பற்றுகிறார்கள் என்று நீங்கள் அறியாததல்ல!"

• ஜி. முத்து



**கண்மணி :** நாம் இன்னொரு துறையைப் பற்றியும் கவனித்தாக வேண்டும். பெண்சீர் திருத்தத்திலும், பெண்கள் முன்னேற்றத்திலும் அண்ணா பெரிதும் அக்கறை கொண்டிருந்தார். வேலைக்காரி போன்ற படங்களில் அவர் படைத்த பாத்திரங்கள், வசனங்கள் மூலம் இதை உணர முடியும். அரசியலிலும், அரசிலும் பெண்களுக்குக் கௌரவமான பங்கினை அவர் அளித்தார். அவரது நினைவைப் போற்றும்விதமாகத்தான் மக்கள் இன்று ஒரு பெண்மணியை முதலமைச்சராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

* திருமதி கண்மணி



"அரசியலிலும், அரசிலும் பெண்களுக்குக் கௌரவமான பங்கினை அவர் அளித்தார். அவரது நினைவைப் போற்றும்விதமாகத்தான் மக்கள் இன்று ஒரு பெண்மணியை முதலமைச்சராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்."

முத்து : ஒரு பெண்மணி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்று நானும் மகிழ்கிறேன். அந்தப் பெண்மணியும் பல பெண் அமைச்சர்களுக்கும் எம். எல். ஏக்களுக்கும் இடமளித்திருக்கிறார். ஆனால் அண்ணா காட்டிய வழியில் இவர்கள் செல்கிறார்களா என்பதுதான் முக்கியம். உதாரணமாக அண்ணா காலத்தில் மதுவிலக்கு அமுலில் இருந்தது. அதை நீக்கக் கூறப்பட்ட ஆலோசனைகளை அவர் ஏற்கவில்லை. அவர் காலத்துக்குப் பிறகு என்ன ஆயிற்று? இப்போது எப்படி நடக்கிறது? எல்லாம் நமக்குத் தெரியும். இங்கே நான் யாரையும் தனிப்பட்ட முறையில் விமர்சிக்கவில்லை. ஆனாலும் அண்ணாவின் கொள்கைகள் படிப்படியாக மறக்கப்பட்டு வருகின்றன என்பதைத்தான் வலியுறுத்த விரும்புகிறேன். இன்னும் சொல்லப் போனால் ஆலய வழிபாடு அண்ணாவுக்கு ஏற்ற கொள்கையல்ல. இன்று அவரது பாரம்பரியத்தில் வந்தவர்கள் எந்த அளவுக்கு அண்ணாவின் கொள்கையைப் பின்பற்றுகிறார்கள் என்று நீங்கள் அறியாததல்ல!

பிரேம் : கால மாற்றத்திற்கு ஏற்ப சில கொள்கை மாற்றங்களும் நேரத்தான் செய்கின்றன! அண்ணாவே மாறவில்லையா? தனித் தமிழ்நாடு கோரிக்கையைக் கைவிடவில்லையா?

கண்மணி : தமிழை ஆட்சி மொழியாக்கினவர் அண்ணா. அவரது தமிழ்ப் பற்றை இன்றும் மக்கள் மறக்காமல் இருக்கிறார்களே! பள்ளிகளில் தொடங்கி, ஆராய்ச்சி நிலை வரை தமிழ், பாட மொழியாகப் பின்பற்றப்படுகிறதே!

முத்து : தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் அளிக்காமல் ஆங்கிலத்தைப் பாட மொழியாகக் கொண்டு இயங்கும் தனியார் பள்ளிகள்தான் தமிழ்நாட்டில் இன்று ஏராளம் உள்ளன. பணத்தை வாரி இறைத்து இப்பள்ளிகளில் தங்கள் பிள்ளைகளைச் சேர்த்துப் படிக்க வைப்பதைத்தான் கௌரவமாக மக்கள் கருதுகின்றனர். அண்ணாவின் வழியில் வந்துள்ள பல அரசியல்வாதிகளும் இதில் அடங்குவர்!

பிரவீன் : அகில இந்திய அளவில் வேலை வாய்ப்புக்காக ஆங்கில அறிவைப் பெருக்கிக் கொள்ள பிள்ளைகளை ஆங்கிலப் பள்ளிகளில் சேர்க்கின்றார்கள். இதில் தவறிருப்பதாகத் தெரியவில்லை.

பிரேம் : அண்ணாவே ஆங்கிலப் புலமை மிக்கவர்தான். ஆங்கிலத்தின் எதிரியும் அல்ல. இரு மொழித் திட்டத்தின் சிற்பி அவர்.

முத்து : ஆயினும், சொந்த சௌகரியத்துக்காக தமிழ் மொழிப் பற்றைக் காற்றில் பறக்க விடுவோருடன் அண்ணாவின் நிலையை ஒப்பிட முடியாது!

டாக்டர் பெருமாள் : 'தென்னாட்டின் பெர்னாட் ஷா' என்னும் பட்டத்தை அண்ணா அவர்களுக்கு 'கல்கி' அவர்கள்தான் சூட்டினார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும் என நினைக்கிறேன்!

முத்து : பெரும்பாலான இளைய தலைமுறையினருக்கு அண்ணாவைப் பற்றிய இத்தகைய செய்திகள் எல்லாம் நிச்சயம் தெரியாது என்று திட்டவட்டமாக என்னால் கூற முடியும். அண்ணா ஓர் அரசியல்வாதி. திராவிட பாரம்பரியத்தில் ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்த முதல் முதலமைச்சர் என்ற அளவில்தான் இளைய சமுதாயத்தினருக்குத் தெரிந்திருக்கிறது. அண்ணாவின் புலமை, முதிர்ந்த அறிவாற்றல், எழுத்தாற்றல், மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு என்று சொன்ன கண்ணியம், அனைவரையும் அணைத்துச் செல்லும் யதார்த்தப்பான்மை ஆகியவை இன்றைய தலைமுறைக்குச் சரியாகத் தெரியப்படுத்தப் படவில்லை... தெரியப்படுத்தத் தவறி விட்டார்கள் என்றுதான் கூறுவேன்!

பிரவீன் : இன்னொன்று... அண்ணா பிராமணர்களை என்றுமே எதிர்த்த

* பிரவீன் குமார்



"நம்மைப் போன்ற இளையதலைமுறையினருக்கு அண்ணாவின் குணஇயல்புகளையும், திறமைகளையும், சேவைகளையும், தீர்க்க தரிசனங்களையும், அவரது பாரம்பரியத்தில் ஆட்சிக்கு வந்தவர்கள் சரியாக வெளிச்சம் போட்டுக் காட்டத் தவறி விட்டனர் என்று கூறத்தான் வேண்டியிருக்கிறது!"

தில்லை... பிராமணீயத்தைத்தான் எதிர்த்தார்...

முத்து : அதாவது உயர் ஜாதி, கீழ் ஜாதி என்னும் பாகுபாடு, ஒதுக்கப்படுதல், தீண்டாமை போன்ற அநாகரீகங்களை!

கண்மணி : அண்ணாவின் இக் கொள்கையை மக்கள் மனதில் இன்றும் கொண்டுள்ளதனால்தான் ஒரு பிராமணப் பெண்மணியை மக்கள் முதலமைச்சராகத் தேர்ந்தெடுத்து உள்ளனர்... தற்போது இத்தகைய வேற்றுமைகள் சமுதாயத்தில் அதிகம் இல்லாததே அவரது நினைவுக்குச் சான்றுதானே! எனவே அண்ணாவை மறந்து விட்டார்கள் என்று கூறி விட முடியாது!

முத்து : மறந்து விட்டார்கள் என்று நிச்சயம் கூற முடியும்... வானொலியிலும், டெலிவிஷனிலும் இந்தி எட்டிப் பார்த்து ஆக்ரமிப்பு செய்யத் தொடங்கி விட்டது. அதை வன்மையாக எதிர்ப்பவர் இல்லை. தமிழக அரசியலில் பண ஆதிக்கம் கை ஓங்கிச் சேவை மனப்பான்மை மறைந்து விட்டது. மாற்றுக் கட்சியினரை மதிக்கும் அரசியல் கண்ணியத்தைத் தேடினாலும் கண்டுபிடிப்பது கடினமாகி விட்டது. எளிமையான வாழ்க்கை என்றால் என்ன என்று இன்றைய அரசியல்வாதிகள் கேட்கும்படியான நிலையில் இருக்கிறார்கள்.... சில எம்.எல்.ஏக்களைப் பற்றியெல்லாம் வரும் செய்திகளைப் பார்க்கும் போது கடமையுணர்வும், கட்டுப்பாடும் அண்ணாவின் கால கட்டத்தோடு காணாமல் போய் விட்டன என்றுதான் கூறவேண்டி உள்ளது! இல்லாவிட்டால் வலுக்கட்டாயமாகக் கைதிகளை விடுவித்த எம்.எல்.ஏவை போலீஸார் தேட வேண்டிய நிலை வருமா?

டாக்டர் பெருமாள் : இன்றைய நிலையில் எந்த வழிமுறைகள் மூலம் அண்ணாவைப் பற்றிய சிறப்புகளை மக்களிடையே பரப்ப முடியும் என்கிறீர்கள்?

முத்து : அண்ணாவின் கொள்கைகளைப் பற்றி ஆய்வு செய்வதாலோ, பேசுவதாலோ, பத்திரிகையில் எழுதுவதாலோ வேறு வகை வகையான பிரசாரத்தாலோ மட்டும் ஒரு பயனும் விளையாது. இவற்றுடன் சேர்ந்து ஆட்சியாளர்களும் மக்கள் பிரதிநிதிகளும் அண்ணாவின் கொள்கைகளை அனுசரித்து நடந்து முன்னுதாரணமாகத் திகழ வேண்டும். இது இல்லாமல் வெறும் பிரசாரம் மட்டும் என்றால் மக்களைச் சென்றடையாது. மக்களும் திசை தவறித்தான் போவார்கள்.

டாக்டர் பெருமாள் : அண்ணா ஒரு தமிழ்த் தலைவன் மட்டுமல்ல. குறுகிய எல்லைகளைக் கடந்த மக்கள் தலைவன் என்கிற உணர்வோடு அவரது நினைவைக் காக்க மக்களும் தலைவர்களும் பாடுபட வேண்டும். அரசியல் சார்பற்ற அணுகுமுறைதான் இதற்கு உதவ முடியும்.

ஏற்பாடு, தொகுப்பு : நாயகன்

புகைப்படங்கள் : யோகா

## ஒரு திருத்தம்

**“சொல் விளையாட்டு - 2” போட்டியில் ஒரு தவறு நேர்ந்துள்ளது. (24.1.93 இதழ் - பக்கம் 11) வலது பத்தி முதல் சொல்லில், மூன்றாவது சதுரத்துக்குள் அடங்க வேண்டிய வட்டம், அடுத்த நாலாவது சதுரத்துக்குப் போய் விட்டது.**

சரியான அமைப்பு பின் வருமாறு :

**கா று ப் ற் பா**



**இத்தவறு காரணமாக வாசகர்களுக்குச் சரியான விடை உருவாக்க முடியாது போயிருக்கும். எனவே, மூன்றாவது கட்டத்தில் வட்டம் அமைந்திருப்பதாகவே கருதி விடை எழுதக் கோருகிறோம்.**

முடிவு தேதியை 10.2.93 என ஒத்தி வைத்திருக்கிறோம்.

**வாசகர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய சிரமத்துக்கு வருந்துகிறோம்.**

**- ஆசிரியர்**

# விமர்சனம்

●● 'இந்த வருடத்தின் (1992) சூப்பர் ஹிட் பாடல்கள் - 100' என்று எம்-டிவியில் ஒரு நிகழ்ச்சி. ஏறக்குறைய அரை நாள் ப்ரோக்ராம். சினிமாப் பாட்டுத்தான் என்றில்லை, தனிப்பட்ட இசைக் குழுக் களின் பாடல்களும் அநேகம். யார் யாரோ பாடினார்கள். யார் யாரோ பரிசு வாங்கி னார்கள். (பிரசித்தி பெற்ற மைக்கேல் ஜாக்ஸனோ, மடோனாவோ, சமந்தாவோ முதல் இடம் இல்லை என்பதை கவனிக்க.) ஒரே ஆறுதல் - ஏதோ ஒரு இந்திய இசைக் குழுவின் பாடலுக்கு முப்பத்தி சொச்ச மாவது இடம்.

●● 'பம்பாயில் பயங்கரக் கலவரம். கடைகளுக்குத் தீவைப்பு. இத்தனை பேர் செத்தார்கள். இத்தனை பேர் சாக இருக்கிறார்கள். செய்திகள் முடிவடைந்தன.

# பிபிஸியில் பம்பாய் பயங்கரம்!

வணக்கம்.' - காதைத் தொடுகிற அளவுக்கு வாய் விரியச் சிரித்து விட்டு, நம்மவர்கள் செய்தியை முடித்து விடுகி றார்கள். ஒப்புக்காக ஓரத்தில் 'பம்பாய் பலி' என்று ஒரு கார்டு. பம்பாயின் உண்மை ஸ்வரூபத்தைப்

✱ டிவியிலாவது...



போன வாரம் அவ்வப்போது பிபிஸியில் பார்க்க முடிந்தது. வீடு களுக்குப் 'பாது காப்பாக' ரௌடி கள் நிற்கிறார்கள். அவர்கள் இல்லாத இடமாகப் பார்த்து போலீஸ்காரர்கள் நிற்கிறார்கள். கடைகள், தொழிற் சாலைகள், ஸ்கூல்... ஒன்று பாக்கியில்லை. பொங்கல் சமயத்தில்

✱ அதிகம் பேசாமல்...



பம்பாயில் மட்டும் தீபாவளி!

●● பெரிய புராணத் தில் வரும் சிறுத்தொண்டர் கதையை ஞாயிறு பைபிளில் பார்க்க நேர்ந்ததில் வியப்பு. சிறுத்தொண்டரிடம், பிள்ளைக் கறி கேட்டது போலக் கடவுள், ஆபிரகாமிடமும் அதையே கேட்டிருக் கிறார்!

●● கொஞ்சம் பொங்கல் நிகழ்ச்சிகள். இரண்டு கவியரங்கம், ஒரு நாடகம், இரண்டு மலரும் நினைவு, கொஞ்சம் கொல்லிசை எக்ஸட்ரா.

புதன் இரவு இரண்டாவது சேனல் இலக்கியச் சோலையில் மு. மேத்தா (யாத்திரை - மாத்திரை, பாதை - போதை) நிர்மலா சுரேஷ் (ஸ்கூல் படித்த நாட்களை மறக்க முடியவில்லை போலும்), முத்துலிங்கம் (மரபுக் கவிதை! மரபுக் கவிதை!).

வியாழன் காலை அப்துல் ரகுமான், பொன்மணி, குருவிக்கரம்பை.

● கவனிக்க வேண்டியது...



இத்தனை பேர் கவிதை'களையும் கேட்டதில் தோன்றியது: 'பாவம் புதுக் கவிதைகளுக்குக் கொஞ்ச நாள் கவிஞர்கள் ஓய்வு கொடுக்கலாம்' என்பதுதான்.

●● திரை

வானில் ஒரு நட்சத்திரம் - ரேவதி - மலரும் நினைவுகள். அவர் அதிகம் பேசாமல், காட்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தது பாராட்டப்பட வேண்டியது. மாலை பேட்டி கொடுத்த சரத்குமார் இதைக் கவனிக்க வேண்டியது.

●● 'வேலை வந்த வேளை' - As usual பண்டிகை நாள் நாடகம். ரொம்ப நாளைக்கப்புறம் (டீ.வி.யிலாவது) பாண்டியராஜனைப் பார்க்க நேர்ந்ததில் சந்தோஷம்.

●● திங்களன்று இரவு, ஸ்ரீரங்கம், திருவல்லிக்கேணி கோவில்களின் வைகுண்ட ஏகாதசி உற்சவத்தை முழுசாக அரை மணி ஒளிபரப்பினார்கள். நேரில் போயிருந்தவர்களுக்குக் கூட இப்படி ஒரு அற்புத சேவை கிடைத்திருக்காது. டைட் குளோஸப்பில் ரங்கநாதரும், பார்த்தசாரதியும். லட்ச ரூபாய் கொட்டிக் கொடுத்தாலும் கிடைக்காத காட்சி. தொலைக்காட்சியை மனசாரப் பாராட்ட ஒரு மகா வாய்ப்பு.

– கிச்சா



# உங்கள் பண்ணை வீடு கட்ட எங்கள் தன்னிறைவு பெற்ற பண்ணை வளாகத்தில் தேர்ந்தெடுப்பீர் ஓர் இடம் மிக எளிய நீண்ட தவணையில்



**ஒரு மனைக்கான தனி அம்சங்கள் :**

1. 6,000 ச. அடி இடம்
2. அதில் வீடு கட்ட 1500 ச. அடி
3. ஒவ்வொரு மனைக்கும் முள்கம்பி வேலி மற்றும் இரட்டை இரும்புக் கதவு
4. 14 உயர் விளைச்சல் கொண்ட தென்னை மரங்கள், மற்றும் மா, பலா, கொய்யா, சீதா, சப்போட்டா, மாதுளை பழ மரங்கள்.
5. 6 வருட சிறந்த பராமரிப்பு.

## பண்ணை வளாகத்தில் அமையப்பெற்ற சிறப்பு அம்சங்கள் :-

1. பண்ணை வளாகத்தை சுற்றி 6 1/2 அடி உயர கண்ணாடி துண்டுகள் பதிக்கப்பட்ட கருங்கல் காம்பௌண்ட்.
2. 24 மணி நேரமும் சிறந்த பாதுகாப்பு.
3. சென்னையிலிருந்து போய் வர வாகன வசதி.
4. ரோடு மற்றும் பொது இடங்கள் நிரந்தர பராமரிப்பு.
5. நீச்சல் குளம், தங்கும் குடில், படகு சவாரி, மீன் பிடி குளம், உள் - வெளி விளையாட்டு அரங்கம், கோவில், தியான மண்டபம், குழந்தைகள் பூங்கா, குதிரை ரத வண்டி, சிறு மிருக காட்சி சாலை, கேபிள் மற்றும் ஸ்டார் டிவி, தொலைபேசி தொடர்பு, மின்சாரம் மற்றும் சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் குழாய் வசதி, உணவகம், மருத்துவ வசதி, பல் பொருள் சிறப்பங்காடி, பால் நிலையம், அழகு நிலையம், இவ்வளவும் கம்பெனி பொறுப்பில் செயல்படும்.

இடம் : சென்னை-பெங்களூர் நெடுஞ்சாலையில், காஞ்சிபுரம் அருகில்

இவ்வளவும் மிக எளிய நீண்ட தவணை முறையில் அடையலாம். ரூ. 1000/- வீதம் 72 மாதங்கள், உங்கள் பெயரில் பத்திரம் பதிவு செய்யும்போது தனியாக ரூ.20000,- ஆக ரூ.92000 மட்டுமே. பிரதி மாதமும் குலுக்கல் உண்டு. குலுக்கலில் தேர்ந்தெடுக்கும் அதிர்ஷ்டசாலி மீதமுள்ள தவணைகள் செலுத்த வேண்டாம். உடனே முந்துங்கள். குறைந்த இடங்களே உள்ளன.

VHR

**வீனஸ்ஹாலிடேரிசார்ட்ஸ்(பி)லிமிடெட்**

147, ரங்கராஜபுரம் மெயின் ரோடு, கோடம்பாக்கம்,
சென்னை - 600 024. தொலைபேசி - 424585.

# பட விளையாட்டு

## பரிசு ரூ. 250

கீழேயுள்ள 'ஃபோர் இன் ஒன்' படத்தில் இடம்பெற்றுள்ள நான்கு நடிகைகள் யார் என்று கண்டுபிடிக்க முடியுமா...?



| | |
|---|---|
| 1 | 2 |
| 3 | 4 |

விடை தெரிந்தால் வரிசைப்படி கீழே எழுதுங்கள் :

1. ..............................................................

2. ..............................................................

3. ..............................................................

4. ..............................................................

உங்கள் பெயர் விலாசத்துடன் இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : 10.2.93

சரியான விடை எழுதுபவருக்கு ரூ 250 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடை எழுத நேர்ந்தால் குலுக்கல் முறையில் பத்துப் பேருக்கு மட்டும் பரிசு பகிர்ந்தளிக்கப்படும்.

உறை மீது 'பட விளையாட்டு' என்று தவறாமல் குறிப்பிடவும்.

உங்கள் பெயர் : ..............................................................

விலாசம் : ..............................................................

..............................................................

..............................................................



# கல்கி



1993
ஜனவரி 31
மலர் : 51
இதழ் : 27
ஆங்கீரச
தை 18

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்றுகும்பிடடி
பாப்பா. -பாரதியார்.

## அமைச்சரவை புதுசு; அசமந்தம் பழசு!

அஸாருத்தினைக் காப்டனாகக் கொண்ட நமது கிரிக்கெட் அணியில் செலக்டர்கள் செய்த மாற்றங்கள் போல்தான் மத்திய மந்திரி சபை மாற்றமும் அமைந்திருக்கிறது. தலை, உடல் எல்லாம் அப்படியே வைத்துக் கொண்டு வால் பக்கம் மட்டும் சுமில் சிறிய மாற்றங்கள் என்பது போலத்தான் அமைச்சரவையிலும் பெருந்தலைகள் ஏதும் உருளவில்லை. சில சில்லறைகளை வீட்டுக்கு அனுப்பி விட்டு, அவர்களுக்குப் பதில் சில ஜாம்பவான்களும் பல புதுமுகங்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். தமிழகத்தைப் பொருத்தமட்டில் காபினெட் அந்தஸ்து தரப்படவில்லை என்பது ஒரு குறைதான் என்றாலும் அந்த அந்தஸ்தைக் கடந்த காலத்தில் பெற்றவர்கள் அதை இழக்கும்படியான காரியங்களையே செய்து, தமிழகத்துக்குத் தலைகுனிவையும் பிரதமருக்குச் சங்கடத்தையும்தான் ஏற்படுத்தினார்கள் என்பதை மறப்பதற்கில்லை. எனவே, தமிழக காங்கிரஸ் அதிருப்தி அடைவதில் அர்த்தமில்லை. தண்டனையைச் சில காலம் அனுபவிக்க வேண்டியதுதான். இளைஞரும் எந்தக் கோஷ்டியையும் சேராதவருமான தங்கபாலுவுக்கு அமைச்சரவை அறிமுகம் கிட்டியிருக்கிறது. நேர்மையும் திறமையும் காட்டிப் பிரகாசிக்கட்டும்.

மந்திரி சபை மாற்றங்கள் பிரதமரின் சென்னை விஜயம் போலவே சப்பென்றுதான் போய் விட்டது. ராஜீவ் சிலை திறந்து, வாழப்பாடியைத் தட்டிக் கொடுத்து, முதல்வருடன் விருந்துண்டு, ஸ்டேடியம் திறந்து திரும்பியதில் விசேஷமாகக் குறிப்பிட்டுச் சொல்லும்படி ஒன்றுமில்லை. நாடு இருக்கும் நிலை பற்றிய ஒரு விமர்சனமோ, பிரச்னைகளைத் தீர்க்க ஒரு யோசனையோ, மக்கள் என்ன செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு வழிகாட்டலோ ஏதுமில்லை. அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி நீடிக்கும் என்ற பழைய பல்லவி, பழைய ராகத்தில், படிந்து போன தாளத்தில், வாய்பாடு போல் ஒப்பிக்கப்பட்டது; அவ்வளவே.

இதே போன்ற அசமந்தம் அமைச்சரவையிலும் தொடர்ந்து நீடிக்குமானால் தேசம் உருப்படாது. அமைச்சரவை முதலில் பிரச்னைகளைப் புரிந்து கொள்ள வேண்டும்; பிறகு அவற்றைத் தீர்க்க வழி வகைகளை யோசித்துத் திட்டம் வகுக்க வேண்டும். திட்டத்தை உறுதியாக அமுல்படுத்தவும் வேண்டும். ஃபைல் பார்த்துக் கையெழுத்துப் போடுவது மட்டுமே அமைச்சர்களின் பணி அல்ல. மக்களுக்கு எழுச்சியூட்டும் விதமாக அமைச்சரவை நடந்து கொள்வது அவசியம். அந்த எழுச்சி தேச பக்தியாகவும் கடமை உணர்வாகவும் செய் நேர்த்தியாகவும் பல்வேறு வடிவங்களை எடுக்க வேண்டும்.

'பவார் பெரியவரா, அர்ஜுன் சிங்கா? அல்லது புதிதாக நுழைந்துள்ள முகர்ஜியா? நரசிம்மராவை எப்போது ஓரம் கட்டி விட்டு யார் பிரதமராகலாம்' என்ற குயுக்திகளை ஒதுக்கி விட்டு, எல்லோருமாகக் கைகோத்து ஒருமுகமாக நாட்டு நலனை எண்ண வேண்டும். மத்திய அமைச்சரவையிலேயே ஒற்றுமை இல்லை என்றால் மக்களிடம் எவ்வாறு ஒருமைப்பாடு உணர்வு தோன்றும்?

பொருளாதார ரீதியில் ஒரு புதிய பாதை வகுத்து முன்னேறத் தொடங்கிய தேசம், பங்கு மார்க்கெட் ஊழலில் சறுக்கி, பாப்ரி மஸ்ஜித்தில் மோதி, நாடெங்கும் கலவரங்களில் தகர்ந்து போயிற்று. தொழில், பொருளாதாரத் துறைகளில் இழந்து விட்ட வாய்ப்புக்களை ஈடுசெய்ய இரட்டிப்பு வேகத்துடன் ஒவ்வொருவரும் பணியாற்ற வேண்டியிருக்கிறது. தேரை இழுத்துச் செல்ல, சட்டம் - ஒழுங்கு நிலைநாட்டல், ஒருமைப்பாடு உணர்வு என்ற இரட்டைக் குதிரைகள் தேவை. மக்களிடம் சமீபத்தில் ஏற்பட்ட சோர்வு நீங்கி, ஒரு புதிய உற்சாகமும் ஊக்கமும் பிறக்கும்விதமாகப் பிரதமர் ஆளட்டும். திருத்தி அமைக்கப்பட்ட புதிய அமைச்சரவை அதற்கு உதவட்டும். வரப் போகும் பட்ஜெட் துணை செய்யட்டும்.

கிரிக்கெட், ஃபுட்பால் ஆட்டங்களில் நாடு அடுத்தடுத்துத் தோல்விகளையே கண்டாலும் பாதகமில்லை. குடி முழுகிப் போய் விடாது. ஆனால் நாட்டையே விளையாட்டு மைதானமாக்கித் தலைவர்கள் பாழ்படுத்தி விட வேண்டாம்.

# சீரான வாழ்வுக்கு அருளும் ஷீரடி

அந்தத் தலத்திற்குத் தினசரி பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் வருகிறார்கள். விடுமுறை நாட்களில் இன்னும் அதிகமாக பக்தர்கள் வந்து குவிகிறார்கள். ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட காரில் வந்திறங்கினாலும் சரி, கால் நடையாகவே வந்தாலும் சரி, அனைவரும் ஒரே வரிசையில்தான் நிற்க வேண்டும். 'சிறப்புத் தரிசனம்' என்கிற பேச்சுக்கே இடமில்லாத இடம் அது.

அதுதான் ஷீரடி என்னும் தலம். வாழ்ந்தவர்களினால் புகழ்பெற்ற இடங்களில் ஷீரடியும் ஒன்று. கிட்டத்தட்ட நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இங்கு வந்த ஒரு 14 வயதுச் சிறுவனின் மகிமையை உணர்ந்த மக்கள், அவரை மஹானாக வழிபடத் தொடங்கினார்கள். அங்கிருந்து சுமார் 65 ஆண்டுகள் தம் பக்தர்களுக்கு வழிகாட்டியாக வாழ்ந்து இறை வனடி சேர்ந்த சாயிபாபாவின் சமாதி இருக்கும் ஒரு சிற்றூர்தான் ஷீரடி.

பம்பாய் - பூனா நெடுஞ்சாலையில் ஒரு பிரிவில் இருக்கும் இந்த நகருக்கு, எல்லா மாநிலத் தவரும் வெளிநாட்டவரும் வந்தாலும், மகாராஷ்டிரர்கள் தாம் அதிகமாக வருகிறார்கள். ஆண்டுக்கு ஒரு

* பாபா ஜீவியந்தராக இருந்தபோது எடுக்கப்பட்டு. இன்றைக்குள்ள ஒரே புகைப்படம் இது என்று கருதப்படுகிறது.





முறையாவது தரிசனம் செய்ய விரும்புகிறார்கள்.

சமாதியின் மீது பாபாவின் முழு உருவச்சிலை அமைக்கப்பட்டு கோவிலாக நிறுவப்பட்டிருக்கிறது. அதிகாலை 4.00 மணிக்குத் துவங்கும் தரிசனம், நள்ளிரவு 12 வரை தொடர்கிறது. காலையில் கிடைக்கும் 4 மணி தரிசனம் மிக முக்கியமான தாகக்கருதப்படு வதால் மக்கள் அதிகாலை 2.30 முதல் வரிசையில் காத்திருக்கின் றனர். மெல்லிய வாத்திய இசை யில் மக்கள் அமைதியாகக் காத் திருக்க, வினாடி பிசகாமல், 4.00 மணிக்கு அபிஷேகம் துவங்கு கிறது. மந்திரங்கள் ஒலிக்க, பல வகையான அபிஷேகங்களுக்குப் பின்னர், கணீரென்று எம்.எஸ்ஸின் சுப்ரபாதம் ஒலிக்க பூஜை தொடங்குகிறது. பூஜை யைத் தொடர்ந்து ஆரத்தி வழி பாடு. ஆரத்தியின் போது பாடப் படுவது ராமகிருஷ்ண மடத்தில் பூஜையின் போது பாடப்படும் அதே பாடல். மலர் களால் அர்ச்சிக்கப்படும் இந்த பூஜையை, எல்லோரும் குளோஸ்டு சர்க்யூட் டீவியில் காண வசதி செய்யப்பட்டிருக்கிறது.

ஆரத்தியைத் தொடர்ந்து, காத்திருக் கும் மக்கள், சன்னதியின் அருகே வரிசை யில் அனுமதிக்கபடுகிறார்கள்.

பளீரென்ற வெள்ளைப் பளிங்கில் வடிக்கப்பட்ட சிலை. சிலையின் கண் களில் கருணை ஒளி மின்னுகிறது. வடிவாக் கப்பட்டிருக்கும் நேர்த்தி, அமர்ந்திருக்கும் பாபாவை நேரில் சந்திக்கும் உணர்வைத் தருகிறது. எல்லாரும் நின்று பார்க்க அவ காசம் தருகிறார்கள். அதிக நேரம் நிற்பவர் களைப் பணிவுடன் நகரும்படி வேண்டு கிறார்கள். சமாதியின் தலைப்பகு தியையோ கால்பகுதியையோ தொட்டு வணங்க அனுமதிக்கப்படுகிறார்கள். வெளியே வரும் போது பிரசாதம் வழங்கு கிறார்கள். காத்திருந்த நேரத்தின் அமைதி, தொடர்ந்த தரிசனம் எல்லாம் ஒரு நிறை வான உணர்வைத் தருகிறது.

வெளியே வருவதற்குள், க்யூ நீண் டிருப்பதை உணர முடிகிறது. சின்ன ஊராக இருப்பதால், ஊர் முழுவதுமே க்யூவாக இருப்பதைப் போன்ற ஓர் உணர்வு. பூஜை, அர்ச்சனை எதற்கும் கட்டணம் கிடையாது. விசேஷ பூஜை செய்ய ரூ. 500 கட்டணம். குறிப்பிட்ட எண்ணிக்கையே பெற்றுக் கொள்ளப்படுகிறது.

இங்கு வந்து வேண்டிக் கொள்வதால் பல அற்புதங்கள் நிகழ்வதாகச் சொல்கிறார் கள். பிணிதீர, குழந்தை வேண்டி, நல்ல எதிர்காலம் வேண்டி பலர் பிரார்த்திக் கின்றனர்.

கோவில் மிகச் சுத்தமாகப் பராமரிக்கப் படுகிறது. பாபாவின் வாழ்க்கையில் சம்பந்தப்பட்ட இடங்கள் புனிதமான வழி பாட்டுத் தலங்களாகக் கருதப்படுகின்றன.

தினசரி பக்தர்களைப் பாபா சந்தித்த இடமான துவாரக்மயி என்ற இடத்தில், தம் தவ வலிமையில் பல்லாண்டுகளுக்கு முன் பாபா ஏற்றி வைத்த நெருப்பு இன்னும் தொடர்ந்து கனிந்து கொண்டிருக்கிறது.

அவர் வாழ்ந்த காலத்தில் அதன் சாம் பல் பலருக்கு மருந்தாக வழங்கப்பட்டுக் குணமளித்ததால், இன்னும் அது பிரசாத மாக வழங்கப்படுகிறது. அதன் எதிரே அவர் அமர்ந்திருந்த சின்னக் கல் திண்ணை முன் தியானம் செய்து, வேண்டி, இந்த பிரசாதத்தைப் பெறுகிறார்கள்.

பாபா தினசரி மாலை ''சாவடி'' என்ற சிறிய இடத்தில் தங்கி உறங்குவது வழக்கம். இந்த இடத்தில் அவர் பயன் படுத்திய பொருட்கள் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. அவர் பயன்படுத்திய அறை முழுவதும் பல கடவுளர் படங்கள். கவரு வது ஆண்டாள் படம், இவை அவர் வாழ்ந்த போது இருந்தனவா, பின்னர்

வந்தனவா என்ற விவரம் யாருக்கும் தெரியவில்லை.

ஷீரடிக்கு அவர் வந்த காலத்தில் தங்கிய வீட்டை, முஸ்லிம் மதத்தினர் பராமரிக்கின்றனர். அனைவரும் அனுமதிக்கப்படும் இதில், வழிபாடு எதுவும் இல்லை. அவர் பொருட்களும் படங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன.

தினசரி ஏராளமான பக்தர்கள் வருவதால் இந்தச் சின்ன நகரில், அநேகமாக எல்லா வீடுகளுமே ஹோட்டல்களாகி விட்டன. மஹாராஷ்டிர மாநில சுற்றுலாத் துறை, ஒரு ஹோட்டலை நடத்துகிறது. ஓர் ஐந்து நட்சத்திர ஹோட்டல் கூட இருக்கிறது. இங்கு இட வசதி போதாமல், அருகில் உள்ள நாசிக் நகரில் தங்கித் தரிசனம் செய்பவர்கள் அதிகரித்து விட்டதால், நாசிக் இப்போது ஹோட்டல் நகரமாகி வருகிறது. ஷீரடியில் விடுமுறை நாட்களில் ஹோட் டல்களில் இடம் கிடைப்பது கஷ்டம். கிடைத்தாலும் வாடகை பயமுறுத்தும். (சாதா ரூமுக்கு ரூ. 300/- பத்து நிமிடங்கள் டாய்லெட் பயன்படுத்த மட்டும் ரூ. 25/-)

கோவிலை நிர்வகிக்கும் டிரஸ்ட், நிறைய அறைகளைக் கட்டியிருக்கிறது. மிக மலிவான இவை, எப்போதுமே ஃபுல்!

வரும் பக்தர்களின் தேவைக்காக, இரண்டரை ரூபாயில் ஸ்வீட்டுடன் டிபன் பாக்கெட்டும், ஐந்து ரூபாய்க்குச் சாப்பாடும் வழங்குகின்றது, நிர்வாகம். இங்கு க்யூவின் நீளம், தரிசனக் க்யூவை விடப் பெரிதாக உள்ளது.

நகர் முழுவதும் கடைகள் - பாபாவின் படங்கள், ஸ்டிக்கர், கேஸட்டுகள், பாபா போஸ்டர்கள் என்று நிரம்பி வழிகின்றன.

பாபாவின் சரித்திரம் சொல்லும் புத்தகங்கள் எல்லா மொழிகளிலும் கிடைக்கின்றன, தமிழ் தவிர. யாரேனும் முயன்று பார்க்கலாம். இந்தப் புத்தகங்கள், படங்கள் தவிர, தினசரி பாபாவுக்கு அணிவிக்கப்படும் சால்வைகளை ஏலமிட்டுக் கிடைக்கும் தொகையும் அறக்கட்டளையின் வருமானம். சாதாரண சால்வையிலிருந்து மிக விலையுயர்ந்த பட்டு வரை, நூற்றுக் கணக்கில் தினசரி சாத்தப்படுவதால், தினசரி ஏலமிருக்கிறது. இதற்குத் தரும் விலையை மக்கள் காணிக்கையாகக் கருதுவதாலும், அந்த சால்வையைப் பூஜையில் பயன் படுத்துவதாலும், ரூ. 1000, ரூ. 2000 என்று கூட ஏலமெடுக்கிறார்கள்.

பாபா ஓர் அவதாரம் என்பதாலும் அற்புதங்கள் நிகழ்த்திய மகான் என்பதாலும், வழிபடும் மக்கள் அதிகரித்து கொண்டேயிருக்கிறார்கள்.

– ரமணன்.

## அமிழ்தில் தோய்த்து எழுதிய காவியம்!

◆ காலத்தால் அழிக்க இயலாத கருத்துக் கருவூலம் - எத்தனை தடவை படித்தாலும் படிக்கப் படிக்கச் சுவையூட்டும் சரித்திர நவீனம் சிவகாமியின் சபதம். இம் முறையும் படிக்கச் சுவையாக இருந்தது எனக் கூறுவது கரும்பு இனிக்கிறது என்பதற்கு ஒப்பானது.
திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

◆ 'சிவகாமியின் சபதம்' எனும் ஒப்பற்ற காவியம், இந்த இதழோடு முடிந்து விட்டதை நினைக்கும் பொழுது, எதையோ இழந்து விட்டது போல் ஏதோ ஓர் இனம் புரியாத சோகம் என் நெஞ்சில் ஒட்டிக் கொண்டது.
கடம்பதல்லூர், ஏ. எஸ். மீனாட்சி சுந்தரம்.

◆ எங்களைப் போன்ற இளைய தலைமுறையினருக்குச் சிவகாமியின் சபதம் படிக்க நல்ல சந்தர்ப்பம் அளித்தமைக்கு நன்றி.
சென்னை - 17, ஜெயந்தி கணேஷ்.

◆ சிவகாமியின் பாதச் சலங்கைகள் என் செவிகளில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன.
சிதம்பரம், என்.எம். கிருஷ்ணா.

◆ அமரர் கல்கியின் படைப்புகளை எத்தனை முறை படித்தாலும் அலுப்பதேயில்லை. சிவகாமியின் சபதமும் அப்படியே! அமரர் கல்கி தமது படைப்புகளை அமிழ்தத்தில் தோய்த்து எழுதினாரோ என்று தோன்றுகிறது.
திருவண்ணாதபுரம் - 3, தி. க. பாலசுப்பிரமணியன்.

◆ சிவகாமியின் சபதம் கடைசி அத்தியாயம் படித்துக் கண்ணீர் விட்டுக் கரையாதவர் கல் மனம் படைத்தவரே -ஐயமில்லை!
சென்னை - 101, ஜோதிர்லதா கிரிஜா.



# நேர்மை

**மாலா பாஸ்கரன்**

கேசவனுக்கு மனசெல்லாம் இத்தித்தது. எதிர்பார்த்துக் கிடந்த இண்டர்வியூ. இன்னும் நான்கு நாட்களில், பொருளியல் ஏணியில் உயர்ந்து கொண்டிருக்கும் கம்பெனி. மூளையையும், கையையும் மதிக்கிற நிர்வாகம். மதிப்பான வேலை.

அப்பா உயர் பதவி வகிக்கும் கம்பெனி அது. இந்த நேர்முகத் தேர்வு செலக்ஷன் எல்லாம் ஒரு நாகரிகப் போர்வை போலப் பட்டது. நிச்சயம் நமக்கு வேலை உண்டு. அப்பாவுக்காகவாவது கம்பெனி குனிந்து தன்னைத் தோளில் தூக்கிக் கொள்ளும்... கேசவன் ஆனந்தப்பட்டான்.

"அப்பா எனக்கு இண்டர்வியூ பன்னிரண்டாம் தேதி."

"எங்கேயிருந்து கேக?" அப்பா சச்சிதானந்தன் கால்களை ஷூக்களுக்குள் புதைத்துக் கொண்டே கேட்டார்.

"என்னப்பா தெரியாதது மாதிரி கேட்கிறீங்க? உங்க கம்பெனிலேர்ந்துதான். மைசூர் கெமிக்கல்ஸ்லேர்ந்து."

"என் கம்பெனிக்கு அப்ளிகேஷன் போட்டிருந்தேன்னு சொன்னியே... அது தானா...?"

"ப்ளீஸ் டாட். இந்த வேலை எனக்குக் கிடைக்க வழி பண்ணுங்கப்பா. நீங்க மனசு வச்சாப் போதும்."

கேசவன் என்கிற கேக அப்பா சச்சிதானந்தத்தின் மனசை அசைக்கப் பார்த்தான்.

"இங்கே பாரு கேக. எல்லார் மாதிரியும் பேப்பர்ல விளம்பரம் பார்த்து நீ அப்ளிகேஷன் போட்டிருக்கே. அவங்க இண்டர்வியூவுக்குக் கூப்பிட்டிருக்காங்க. அவ்வளவுதான். நான் என் கம்பெனியிலே வேலை வாங்கிக் கொடுக்கணும்னா எப்பவோ செய்திருப்பேன். நீ உன் திறமையினால உன் சொந்தக் கால்ல நிக்கணும். மத்தவங்க சிபாரிசுல வரக்கூடாது. அது உன்னோட படிப்பையும், திறமையையும் நீயே அசிங்கப்படுத்தறதா அர்த்தம். இன்னிக்கு நான் உனக்கு என் மகன்னு சிபாரிசு செய்தால் இருபத்தைஞ்சு வருஷமாக் கடைப்பிடிக்கிற என் நேர்மையும் நியாயமும் என்னாவுறது. வா... வந்து உன் திறமையைக் காட்டு." சச்சிதானந்தன் ப்ரீப்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டு கம்பெனிக்குப் புறப்பட்டுப் போனார்.

அப்பாவின் உயிர் நண்பர் இக்பால். அவரும் அப்பா கம்பெனியில்தான் வேலை பார்க்கிறார். அவரைப் போய்ப் பார்த்தான் கேசவன்.

"கேசவா... உன் அப்பன் வச்சதுதான் சட்டம் அங்கே. அவனுடைய உழைப்புலதான் அந்தக் கம்பெனி சிகரமா ஓசந்து நிக்குது. அவனைத்தான் உனக்குத் தெரியுமே? நேர்மைக்கும், திறமைக்கும்தான் முதலிடம் கொடுப்பான். என்னையே கம்பெனிக்கு உள்ளே என்ன வெரட்டு வெரட்டுவான் தெரியுமா?"

இக்பால் மாமாவின் பேச்சு மனசுக்குள் துளிச்சல் தோரணம் கட்டியது.

மைசூர் கெமிக்கல்ஸ் பிரைவேட் லிமிடெட், வாசலில் குல்மொகர் மரங்களை வைத்திருந்தது. வசீகரமான கட்டடங்கள். பணம் பிதுங்கும் தொழிற்சாலை, மொசைக் தரையில்... ஒரு புன்னகையைப் போல... குட்டி குட்டியாய்ப் பூந்தொட்டிகள்.

இண்டர்வியூவுக்கு வந்திருந்தவர்கள் வரிசை வரிசையாக உட்கார்ந்திருந்தனர். கேசவனும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

ஒவ்வொருவரும் நழுவி நழுவி, கேசவனை அழைக்க ஒரு மணி நேரம் பிடித்தது.

ஏ. ஸி. பிதுக்கும் அறையில் மூன்று பேர் உட்கார்ந்திருந்தனர். நடுவில் அப்பா. அப்பாவைக் கண்ட கேசவனுக்குள் மின்சாரத் தேன் வழிய... கட்டுப்படுத்திக் கொண்டான். அப்பாவுக்கு இதெல்லாம் பிடிக்காது.

எல்லாச் சான்றிதழ்களும் பார்க்கப் பட்டபின் சின்னச் சின்னதாய்ப் பத்துப் பதினைந்து கேள்விகள். சிலவற்றுக்குப் பதில் சொல்லத் தடுமாறிச் சமாளித்தான். கடைசியில் நன்றி சொல்லி விடைபெற்று வெளியேறினான்.

**ப**த்து தேதிகள் உதிர்ந்தன. பைபூர் கெமிக்கல்ஸ் கடிதம் அனுப்பியிருந்தது கேசவனுக்கு. 'தங்களுக்கு வேலை கொடுக்க முடியாமைக்கு வருந்துகிறோம்' என்று குறிப்பிட்டு.

கேசவன் மனம் உடைந்தான். அப்பா வேலை பார்க்கும் கம்பெனி இப்படி உதடு பிதுக்கிக் கைவிரித்ததை எண்ணிக் கோபப் பட்டான்.

சாயந்திரம் வந்தவுடன் அப்பாவிடம் விசாரிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

அப்பாவின் கம்பெனிக்குச் சென்று... அப்பாவின் நண்பர் இக்பாலைப் பார்த்தான்.

''கேசு... உன் அப்பன் சச்சி இருக்காளே... அவன் பொழைக்கத் தெரியாத ஆளு... உன்னை இண்டர்வியூ பண்ணு வாங்களே மத்த இரண்டு பேரும் உனக்கு நல்ல மார்க் போட்டிருக்காங்க. உன் அப்பன் தான் உனக்குக் குறைச்சி மார்க் போட்டிருக்கான். கூட்டிப் பார்த்ததுல மார்க் குறைஞ்சு, உனக்கு வேலை கெடைக்காம போயிட்டுது. அடுத்த வேலைக்கு முயற்சி பண்ணு கேசு...''



**சா**யந்திரம் சச்சிதானந்தன் வந்தது தான் தாமதம்... கேசவனுக்குள் பாயத் தொடங்கின கோபக் குதிரைகள்.

"என்னப்பா நீங்க இப்படி செஞ்சிட்டீங்க. மத்த ரெண்டு பேரும் நல்ல மார்க் போட்டிருக்காங்க. நீங்கதான் குறைச்சுப் போட்டு என் வேலைல மண்ணை அள்ளிப் போட்டிருக்கீங்க. உங்களுக்கு ஈகோ. பையன் நம்ம கம்பெனில சேர்ந்து நம்மை விடப் பெரிய பொசிஷனுக்கு வந்துடுவா னோன்னு."

"டேய் டேய், நிறுத்துடா. உனக்கு நான் மட்டும் மார்க் குறைச்சு ஏன் போட்டேன்னு முதல்ல தெரிஞ்சுக்க."

"சொல்லுங்க அதையும்தான் கேட்போம்..." மூக்கு புடைத்தது கேசவனுக்கு.

சோபாவுக்குள் உடலைத் தளர்த்திக் கொண்டே பேசத் தொடங்கினார் சச்சிதானந்தன்.

"மத்த ரெண்டு பேரும் உன் பர்பார்மன்ஸ் சரியில்லாட்டாலும் நீ என் மகன்ங் கறதுனால கூட மார்க் போட்டிருக்காங்க. நான் அப்படி இல்ல. உன்னோட ரெண்டு பக்கமும் தெரிஞ்சவன் நான். என் கம்பெனி சட்டங்களுக்கும் விதிகளுக்கும் - அதாவது ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷனுக்குப் பேர் போனது. இருபத்தைஞ்சு வருஷமா அது தான் அங்கே சட்டம். நீ போன நியூ இயர் அப்போ என்ன சொன்னே...? 'அப்பா, நான் பி. ஏ. பண்ணப் போறேன்'னே... கேன் அண்ட் கோவுல சேர்த்துவிட்டேன். 'பிப்ரவரி லேர்ந்து வீணை கத்துக்கப் போறேன்'னு சொன்னே. தஞ்சாவூர் போய் வீணை வாங்கிக் கொடுத்தேன். 'புது புத்தகங்கள் வாங்கணும்; நிறையப் படிக்கப் போறேன்'னு சொன்னே... ஒரு தடவை... ஏன், எதுக்குன்னு கேட்காம களையா ரெண்டாயிரம் ரூபாய் செக் போட்டுக் கொடுத்தேன். புத்தகமும் வாங்கிக்கிட்டு வந்தே... எல்லாம் என்னாச்சு? பி. ஏ. படிப்பு பாதில நின்னு போச்சு... இதோ வீணை தூசி படிஞ்சு தூங்கிக்கிட்டு இருக்கு... வாங்கின புத்தகம் புரட்ட ஆளில்லாம கிடக்கு... நீயா உனக்குள்ளே போட்டுக்கிட்ட விதிகளைக் கூட உன்னால நடைமுறைப்படுத்த முடியலையே... நாங்க கம்பெனியில போடுற விதிகளுக்கு உன்னால எப்படிப் பணிஞ்சு போக முடியும்? ஓபீடியண்ட்ங்கிறது அகராதியிலே இல்லே, மனசுல இருக்கு கேசு..." காயமாய் இருந்த கேசவனின் மனத்தைக் கனிய வைக்கும் முயற்சியில் சச்சிதானந்தன் பேசினார்.

கேசவன் மனசுக்குள் மெல்ல மெல்லப் பழுக்க ஆரம்பித்தான்.




- தொழில் துறையில் முதலீடாவது உங்கள் வரிப்பணம்; உங்கள் சேமிப்பு!
- உங்கள் செல்வம் தொழில்துறையில் எப்படிப் பயனாகிறது? தெரிந்து கொள்ளுங்கள்!
- எங்கே, எத்தகைய முன்னேற்றம்? எதில் பின்னடைவு, ஏன்? புரிந்து கொள்ளுங்கள்!
- எட்டுத் துறைகள் பற்றிய ஏராள விவரங்கள்! ஒவ்வொரு வரியும் ஒரு புதிய ஆச்சர்யத் தகவல்!

**கல்கி**
**தொழில் மலர் 1993**

இன்றே உன்னூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொண்டால் ஏமாற்றத்தைத் தவிர்க்கலாம்.

## 27

நகரத்தின் இதய பாகத்தில் காவல் நிலையம். சிவப்புச் சுவர்கள் ரத்த பயங்கரமாய் ஜனங்களை மிரட்டிக் கொண்டிருக்கிறது.

இன்ஸ்பெக்டர் ரத்தநாளங்கள் விறைத்து விம்மிப் போயிருந்தார். மூளை சூடேறித் தகித்தது. தடியைப் பிரயோகிக்கத் துடித்துக் கொண்டிருந்தார். எரிச்சலின் உச்சத்தில் குமுறிச் சிவந்து போயிருந்தார்.

அப்போதுதான் டெலிபோன் கூப்பிட்டுத் தொல்லை செய்கிறது. இன்ஸ்பெக்டரின் பார்வையின் அனலைக் குறிப் பறிந்து, கான்ஸ்டபிள் ரிசீவரை எடுத்தார்.

''அலோ'' என்ற கான்ஸ்டபிளின் குரலில் பதற்றம், நடுக்கம்.

''ஐயா.... எஸ்.பி. ஆபீஸ்லே யிருந்து...''

எரிச்சலில் தடியை மேஜையின் மீது எறிந்து விட்டு... ரிஸீவரைக் கையில் வாங்கினார்.

''எஸ், ஸார்....''

''லிட்நாப் கேஸ்லே பழநின்னு ஒருத்தரை என்கொயரி பண்றீங்களா?''

''எஸ், ஸார்.''

''எப்படியிருக்கு?''

''ரொம்ப டஃப்பாயிருக்கான், ஐயா குற்றவாளிங்கிற பயமேயில்லே. பணிவு மில்லே.''

''வயலன்ஸை யூஸ் பண்ணலையே?''

''இன்னும் இல்லே, ஐயா.''

''இனியும் வேண்டாம். யூனியன் லீடர். ஸ்மூத்தா டீல் பண்ணுங்க. இல்லேன்னா... சிமிண்ட் பேக்டரியிலே ஸ்டிரைக், அது இதுன்னு.... வீணான லா அண்ட் ஆர்டர் ப்ராப்ளம் வந்துரும்.''

''எஸ்.... ஸார்.''

''அது மட்டுமில்லே. எனக்குக் கிடைச்ச தகவல்படி, அந்த யூனியன் லீடர் நல்ல டைப்பா தெரியுது. நீங்க ஸ்மூத்தா டீல் பண்ணுனீங்கன்னா... அந்த ஆளு உங்களோட கோ ஆப்ரேட் பண்ணுனாலும் பண்ணுவான். நீங்க அதை யூஸ் பண்ணிக்கலாம்.''

''எஸ், ஸார்.''

# முற்றுகை

டெலிபோனுக்கு இன்ஸ்பெக்டர் போவதைப் பார்த்தவுடன்... பழநிக்குள் ஆசுவாசம். ஒரு சின்ன ஆசுவாசம். காவல் துறையோடு தேவையில்லாமல் ஒரு கௌரவ மோதலைத் தவிர்த்து விட முடியும்.

பழநி யூனியன் லீடர். தொழிலாளி வர்க்கத்தின் பிரதிநிதி. ஒரு கிரிமினலை நடத்துகிற மாதிரி இவனையும் நடத்தக் கூடாது. நடத்துவதற்கு அவன் அனுமதிக்க முடியாது. இழிவு, இவனுக்கு அல்ல. இவனுக்குப் பின்னால் அணிவகுத்திருக்கிற தோள்களுக்கான இழிவு. அந்தத் தோள்களின் முகத்தில் காறித் துப்புவதற்கு அவன் காரணமாக இருந்து விட முடியாது.

அதற்காக... இன்ஸ்பெக்டருடன் மோத வேண்டியிருக்கிறது. முதலில் உட்கார நாற்காலி தர மறுக்கிறார். இரண்டாவது, 'நீ, வா, போ' என்று ஒருமையில் பேசுகிறார்.

இந்த இரண்டை எதிர்த்ததற்கே வெருண்டு போகிறார். கொதிக்கிறார்.

தொடர்ந்து மனிதன் என்கிற தன்மானச் சிலிர்ப்புடன் நடந்து கொண்டால்... தாக்குவார். அடிப்பார். உதைப்பார். பரவாயில்லை.

பிரச்னையை தெருவுக்குக் கொண்டு போய் விட வேண்டியது வரும். ஒரு தலைவரை மரியாதைக் குறைவோடு நடத்தவும், அடிக்கவும் உரிமையில்லை.

அந்த அத்துமீறலை பிரச்னையாக்குகிற போது... தட்டிப் போர்டு... கண்டனப் பேரணி... பொது வேலை நிறுத்தம் என்று பிரச்னை கூடுதல் சிக்கலாகக் கூடும்.

இதையெல்லாம் ஊகித்து, தவிர்க்க விரும்பிய பழநி, தேடி வந்த போலீஸை கொஞ்ச நேரம் காத்திருக்கச் சொன்னான். சங்கத்தின் மாவட்டச் செயலாளரைப் போனில் தொடர்பு கொண்டான். முழுசாக நடந்த விவரம் முழுவதையும் கூறினான். எதையும் மறைக்கவில்லை.

அழகு... ஆசை... காதல்... வந்த கடிதம்... வளத்தையாவின் வேண்டுகோள்.... அனுப்பிய பதில் கடிதம்... ஏமாற்றம் எல்லாமே சொல்லிவிட்டான்.

தற்சமயம் அடைந்திருக்கிற அதிர்ச்சியையும் சொன்னான். மாவட்டச் செயலாளர், எஸ்.பி.யுடன் தொடர்பு கொள்வதாகக் கூறினார்.

அது நல்லதாகப் போய்விட்டது. இதோ... டெலிபோன். இனி, இன்ஸ்பெக்டர் நிறம் மாறுவார். நீர் தெளித்த கொதிப்பாலாவார்.

சகஜமாவார். சுமுகமாவார்.

பழநிக்குள் சொர்ணம் பற்றிய கவலை



அரித்துக் கொண்டிருந்தது. யார் கடத்தியிருப்பார்கள்? என்ன நிலைமை? சொர்ணம் என்ன ஆனாள்? அழுது புலம்புவாளோ? தப்பிக்க வழியற்றுத் தவிப்பாளோ? நினைத்ததற்கு மாறாக நடந்து விட்டதற்காகக் கவலைப்படுவாளோ...

அல்லது.... நான் கடமை தவறி விட்டதாகக் கோபம் கொள்வாளோ....

செய்தி கேட்டவுடன் ஏற்பட்ட அதிர்ச்சி... இப்போது இல்லை. தணிந்து அடங்கி விட்டது. ஆனால்... அவள் என்ன கதியானாளோ என்கிற கவலை மனசுக்குள் உறுத்திக் கொண்டேயிருக்கிறது.

இன்ஸ்பெக்டர் வந்து நாற்காலியில் உட்கார்ந்தார். முகத்தைத் துடைத்துக் கொள்வார். உணர்வுகளை மாற்றிக் கொள்ள முயற்சி செய்கிறார். புருவரோமங்களைத் தேய்க்கிறார்.

இன்னும் நின்று கொண்டிருக்கிற பழநி. முகத்தை நிமிர்த்தாமல் விழியை மட்டும் உயர்த்தி, பழநியைப் பார்க்கிறார்.

''உக்காருங்க... மிஸ்டர்.''

பழநி நாற்காலியில் உட்கார்கிறான். ரொம்ப நேரம் வரை நின்றுவிட்டான். முழங்காலின் உள் பக்கங்கள் வலிக்கின்றன. கோபத்தில் முறுக்கேறிய நரம்புகளைத் தளர்த்துகிற முயற்சியில் திணறுகிற இன்ஸ்பெக்டரைப் பார்த்தான். உதவணும் போல் இருந்தது.

''சார்... என்னாலே ஏதாச்சும் ஹெல்ப் செய்ய முடியுமா? செய்றேன் சார்.''

''அதெப்படி மேன்? பெண்ணை நீங்க கடத்துனதாகத்தான் ரிப்போர்ட்?''

''இல்லைன்னு ப்ரூவ் பண்ண எங்கிட்டே எவிடென்ஸ் இருக்கு சார்...''

''என்னது?''

''கடிதம். சொர்ணம் எழுதுன கடிதம்.''

''இங்க இருக்கா?''

''இருக்கு சார்.''

மேலாண்மை பொன்னுச்சாமி

"போன மாசம் கூடுதலா 'T.A.' கேட்டுப் போராட்டம் நடத்தினீங்க... இப்போ 'E. A.' கேட்டுப் போராட்டம் நடத்தினீங்களாமே...! அதென்ன 'E. A.'...?"

"ஈட்டிக்காரன் அலவன்ஸ்!"

– எஸ். கோவிந்தன்



''கொண்டாங்க.''

கையிலிருந்த டைரி. டைரி கர்ப்ப ஸ்திரீ போலிருந்தது. வீங்கிப் பெருத்திருந்தது. பக்கங்களுக்கு இடையில் செருகப்பட்ட பேப்பர். பேப்பர்கள்.. கடிதங்கள்... கவர்கள்...

அதிலிருந்து சொர்ணத்தின் கடிதத்தை எடுத்து நீட்டினான்.

வாங்கிப் பார்த்தார்.

''இதுலே... உங்க மேலே உள்ள குற்றச்சாட்டை ஊர்ஜிதப்படுத்துற தகவல்தானே இருக்கு? கடத்தும்படி அந்தப் பொண்ணே சொல்லியிருக்கு....''

''எஸ் சார். ஆனா... அந்தப் பொண்ணுக்கு ஏற்கெனவே இருக்கு முற்றுகையைப் பற்றிய விவரங்கள் இருக்கு.''

''ம்.''

''இப்ப யாரு கம்ப்ளெய்ண்ட் குடுத்துருக்காகளோ... அவங்களாலேதான் அந்தப் பொண்ணுக்கு ஆபத்து நேர இருந்துருக்கு. இல்லியா சார்!''

''ம்.''

''ஏன் சார். அவங்களே அந்தப் பொண்ணை ஒளிச்சு வைச்சுக்கிட்டு, ஏன் என்மேலே புகார் குடுத்துருக்கக் கூடாது?''

''தேவையில்லையே. உங்களுக்கும் அவங்களுக்கும் எந்தவிதமான விரோதமுமில்லியே....''

''கட்டாய கல்யாணத்தைத் தடுக்கிறதுக்கு, நா ஒருத்தன் தானே இருக்கேன்?''

''அது சரிதான். ஆனா, போலீஸ் ஸ்டேஷனுக்கு பிரச்னையைக் கொண்ணாந்துட்டா... அப்புறம் கட்டாயக் கல்யாணம் செய்ய முடியாதே? அவங்க திட்டத்தை அவங்களே மண்ணையள்ளிப் போட்டு பாழாக்குவாகளா?''

பழநி காலியானான். அதற்கு அவனிடம் பதில் இல்லை. இன்ஸ்பெக்டர் கேள்வியில் லாஜிக் இருக்கிறது. வலு இருக்கிறது. இவன் வெறுமையாக அவரைப் பார்த்தான்.

அந்நேரம் -

ஸ்டேஷன் வாசலில் ஒருவர்.

ஆலைத் தொழிலாளி. தொழிற் சங்கத் தோழர்.

''பழநியைப் பாக்கணும்.''

''எதுக்கு?''

''முக்கியமான விஷயம்.''

பழநி வெளியே வந்தான். அந்தத் தொழிலாளித் தோழர் பழநியின் காதுகளுக்குள் சொன்னார். அவனுள் பதற்றம். தவிப்பு... கோபம்... குமுறல்...

கிராமத்தில்...

ஏகமாய்க் கூட்டம். ஊர் ஜனம் பூராவும் அந்த மடத்தின் முன் திரண்டிருந்தது. ஜாதி மடம். மடத்திண்ணையில், நாராயணசாமி, வெங்கடாசலத்துடன் வேறு சில பெரிய மனிதர்களும் உட்கார்ந்திருந்தனர். ஊர் ஜனங்கள் முகத்தில் கோப வெறி.

''நம்ம சாதிப் புள்ளையைக் கடத்துறதுக்கு... எளிய சாதிக்காரனுக்கு எம்புட்டுத் திமிரு இருக்கணும்? ராஸ்கல், இதை ஊருன்னு நெனைச்சானா, காடுன்னு நெனைச்சுட்டானா? நம்மளையெல்லாம் ஆம்பளைக இல்லேன்னு எளப்பமா நெனைச்சுட்டானா?'' என்கிற குமுறல். கோபம். வெறி.

முனியசாமி நடுக்கத்துடன் நின்றான். மேல்துண்டை இடுப்பில் கட்டி, பணிவுடன் கேள்விக் குறியாக நின்றான். அவன் முகத்தில் பயம். கண்களில் திகில்.... பீதி.

''என்னடா.... நின்னுக்கிட்டிருக்கே? மரமா நின்னா என்ன அர்த்தம்? முதல்லே... ஊரை வணங்கு.''

சுற்றிலும் மிரட்டுகிற சத்தங்கள். அதட்டலான சத்தங்கள். சுற்றிலும் ஊர் ஜனத்தைப் பார்த்துவிட்டு... பயத்துடன் ''கும்புடுறேன் சாமி'' என்று கையெடுத்து வணங்கினான்.

நெடுஞ்சாண் கிடையாகத் தரையில் விழுந்து கும்பிட்டு எழுந்தான்.

''இப்பச் சொல்லு... சொர்ணத்தை எங்க வைச்சிருக்கே?''

''எங்கிட்டே கேட்டா... எப்படி சாமி? எனக்கு என்ன தெரியும்? எளியவன் நா. உங்க காலடிப் புழுவாக் கிடக்கிறவன். நா எதுக்கு எங்க சின்னம்மாவைக் கடத்தணும்?''

''என்னடா... திருப்பிக் கேள்வியா கேக்கே? ராஸ்கல், நீயும் பேரனும் சேர்ந்து

## அருள்வாக்கு

**பு**ஷ்பத்தின் வாசனை கண்ணுக்குப் புலப்படாது. மூக்குக்குத்தான் அது தெரியும். கற்கண்டின் தித்திப்பு மூக்குக்குத் தெரியாது. அது நாவுக்குத்தான் புலனாகும். சங்கீதம் நாக்குக்குப் புலப்படாது. செவிக்குத்தான் புலப்படும். சூடும் குளிரும் தொடு உணர்ச்சி கொண்ட தோலுக்குப் புலனாகும்; இவற்றைக் காதால் உணர முடியாது. மேலே சொன்ன நாலும் கண்ணுக்குத் தெரியாது. மாறாகப் பச்சை, சிவப்பு முதலிய வர்ணங்கள் காது, மூக்கு, வாய், தோல் இவற்றுக்குப் புலப்படாது; கண்ணுக்கே புலனாகும். நாஸ்திகர் உட்பட அனைவரும் நிச்சயமாக உண்டு என்று கூறுகிற உலக வஸ்துக்கள், இவ்விதம் ஒவ்வோர் இந்திரியத்துக்குப் புலனானாலும் போதும், எல்லா இந்திரியங்களுக்கும் புலனாக வேண்டியதில்லை என்று தெரிகிறது. நாலு இந்திரியங்களுக்குப் புலனாகாமல் ஒரே ஓர் இந்திரியத்துக்குப் புலனானாலும் ஒரு வஸ்து இருப்பதாகவே சொல்கிறோம். உதாரணமாக, சங்கீதம் காது ஒன்றுக்கே புலனாகிறது; அதை ருசிக்கவோ, பார்க்கவோ, முகரவோ, தொடவோ முடியாது. இருந்தாலும் சங்கீதம் என்று ஒன்று கிடையாது என்று சொல்வதில்லை அல்லவா?

ஐந்து இந்திரியங்களுக்கும் புலனாகாமலும் உண்மையில் ஒரு வஸ்து இருக்க முடியுமா என்று யோசித்துப் பார்ப்போம். பிரபஞ்சம் முழுவதிலும் மின்சார அலைகளே வியாபித்திருப்பதாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஆனால் நமக்கு எந்த இந்திரியத்தாலும் அதை அறிந்து கொள்ள முடியவில்லை. என்றாலும் சில பரிசோதனைகளின் மூலம் மின்சாரத்தின் வியாபகத்தையும், அது சரீரம், மூளை எல்லாவற்றிலும் கூட வியாபித்திருப்பதையும் நிரூபித்துக் காட்டினால் நம்புகிறோம்.

இத்தனை இந்திரியங்களையும் அவை கிரஹிக்கிற வஸ்துக்களையும் படைத்து, ஒழுங்கு செய்து வைத்த ஒரு பெரிய அறிவு இருக்கவே செய்கிறது. அதைத்தான் கடவுள் என்கிறோம். மின்சாரத்தைப் போல அதுவும் எங்கும் வியாபித்திருக்கிறது. நமக்குள்ளும் வியாபித்திருக்கிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்



நடத்துற நாடகம், ஊருக்குத் தெரியாதுன்னு நெனைக்கியா? தொலியை உரிக்கக் காயப் போட்டுருவோம். ஜாக்கிரதை. ஊரைப் பகைச்சிக்கிட்டு நீ இருந்துருவே? நாங்க விட்டுருவோமா?''

கற்திலும் தடியடிப் பிரயோகமாய் வார்த்தைகள். வசவுகள். ஆக்ரோஷப் பேச்சுகள். ஜாதி குறித்து இழிவான பேச்சுகள். மிரட்டல்கள். ஆக்ரோஷமாய் அதட்டல்கள்.

கடைசியில்... முனியசாமியைத் தூணில் பிடித்துக் கட்டினார்கள். முரட்டுத்தனமாய் அடிக்கத் துவங்கி விட்டனர்..

கிழவன். வயது முதிர்ந்தவன். சாணிக் கூடை சுமந்து அடிமையாகவே வாழ்ந்தவன். அடிமையாகவே சாக நினைத்தவன்......

**ப**ழநி ரௌத்ரமானான். தாய் தகப்பனில்லாமல் நாதியற்ற சிறுவனாக இருந்தவனை... தாயாக இருந்து பராமரித்து வளர்த்தவர்..... தகப்பனாக இருந்து படிக்க வைத்தவர்..... அன்பு காட்டி, ஆளாக்கி வளர்த்தவர்.....

அவரையா.... ஊர் நடுவே கட்டி வைத்து அடிக்கிறார்கள், பாவிகள்? ஜாதி வெறி. கண்களையும் அறிவையும் இருட்டாக்கிய ஜாதி வெறி. உயர்ந்த ஜாதி என்கிற ஆதிக்கம். இன்னும் கிராமத்து நிலங்களில் ரத்தம் பாய்ச்சுகிற ஜாதி வெறி. மனித உயிர்களைப் பறிக்கிற ஜாதி வெறி.

இதை அனுமதிக்கவே முடியாது. கூடாது.

பரபரத்தான்.

டைரியிலிருந்து நாலாய் மடித்திருந்த வெள்ளைப் பேப்பரை உருவினான். மளமளவென்று எழுத ஆரம்பித்தான்.

''என்ன பழநி... என்ன ஆச்சு?''

''ஒரு கம்ப்ளைய்ண்ட், சார்.''

''அதான் கேக்கேன். என்ன விஷயம்?''

''ஊர்லே எங்க வளர்த்தையாவைக் கொன்னுக்கிட்டிருக்காங்க. கட்டி வைச்சு அடிக்கிறாங்க.''

''இப்ப என்ன செய்யப் போறீக?''

''உங்களுக்கு ஒரு பெட்டிஷன். தீண்டாமை கோர்ட்டுக்கு ஒரு பெட்டிஷன்...''

இன்ஸ்பெக்டர் கண்களில் ஒரு பதற்றம். துரிதகதி. பரபரப்பானார். ''ஜீப்பை எடு'' என்று கத்தினார்.

(தொடரும்)

# சுதாவா இப்படி..!?

மார்க்கெட்டில் கத்தரிக்காய் விலையைக் கேட்டுக் கலங்கிப் போய் நின்ற சமயத்தில்தான் அவரருகில் குரல் கேட்டது.

''என்ன நாகநாதன், கறிகாயெல்லாம் வாங்கியாச்சா?''

திரும்பிப் பார்த்தார். ரகுராமன். அவரது அலுவலக சிநேகிதர். குடும்பத் தொடர்பும் உண்டு.

''நீ எங்கே இந்தப் பக்கம் அதிசயமாய்?'' என்றார் நாகநாதன்.

காய்கறி வாங்குவது, ரேஷன் கடைக்குப் போவது இதெல்லாம் பொம்பளைங்க சமாசாரம் என்பது ரகுராமனின் நினைப்பு என்பது இவருக்குத் தெரியும்.

''திடீர் விருந்தாளிகள். வேற வழியில்லாம வந்துட்டேன், ப்ச்! டீ.வியிலே கிரிக்கெட் மாட்ச் பார்க்க முடியாம தடங்கல்.''

விஷயம் ஆபீஸ் சமாசாரங்களில் தாவி, எதிரிலிருந்த சினிமா போஸ்டரில் வந்து நின்றது.

''அதோ பாரு நாகநாதா, எவ்வளவு அசிங்கமான போஸ்டர். சின்னப் பசங்க கெட்டுக்குட்டிச் சுவராப் போயிடறாங்க.''

''உண்மைதான். வயசுக்கு வந்த பொண்ணை வைச்சுக்கிட்டு வயித்துல நெருப்பைக் கட்டிக்கிட்டுத் திண்டாடறோம்...'' என்று இழுக்காற்போல் நிறுத்தினார் ரகுநாதன்.

''ஏன் தயங்கற?''

''அது... உன் வீட்டுக்கு நேத்து யாராவது விருந்தாளிங்க வந்திருந்தாங்களா?''

''இல்லையே, ஏன்?''

''வந்து... உன் பொண்ணு சுதாவை....''

''அட சொல்லுப்பா!'' என்றார் நாகநாதன் தவிப்புடன்.

''சுதாவையும், கூட ஒரு பையனையும் நேற்று ஐஸ்க்ரீம் பார்லரில் பார்த்தேன்'' என்றவுடன் திக்கென்றது நாகநாதனுக்கு.

''ஜஸ்ட்... ஒண்ணுமில்லே.... இருந்தாலும் வயசுப் பொண்ணு கண்ட சினிமாவையும் பார்த்துட்டுக் காதல், கீதல்னு ஏமாந்துடக் கூடாது, பாரு! எதுக்கும் ஜாக்கிரதையாய் இருப்பா'' என்றவரை அதிர்ச்சி விலகாமல் பார்த்தார்.

சுதாவா இப்படி? பகீரென்றது அவருக்கு.

கல்லூரியில் கடைசி வருடம் படிக்கிறாள். குழந்தை என்று அவளை நினைத்திருப்பது எவ்வளவு பெரிய மடத்தனம் என்ற எண்ணமும் ஓடியது.

அதற்கு மேல் காய்கறி வாங்க முடியவில்லை. உடனே வீட்டுக்குப் போகத் துடித்தது.

உள்ளத்தின் பரபரப்பு நடையில் தெரிய, விறுவிறுவென்று வீட்டை நோக்கி நடந்தார்.

''என்னங்க, போன வேகத்திலேயே திரும்பிட்டீங்க?'' என்று வரவேற்றாள் மனைவி.

''சுதா எங்கே?''

''மாடியிலே படிச்சுக்கிட்டு இருக்கா.''

''ஏன், கீழே படிக்கக் கூடாதா?''

''என்ன கேள்வி இது திடீர்னு?'' என்ற புதிருடன் கணவனைப் பார்த்தாள் ஜானகி.

''சரிசரி, போய் வேலையைப் பாரு.''

''என்னங்க திடீர்னு கோபம்?''

''நேற்று மதியம் நீ எங்கே போயிருந்தே?''

''சினிமாவுக்கு. புதுப்படம். பக்கத்து வீட்டு ஆச்சி கூப்பிட்டாங்கன்னு போனேன். ஏன்?''

''நீ இப்படி பொறுப்பில்லாம சினிமா, டிராமான்னு அலையறதுனாலேதான் உன் மகளும் இப்படி இருக்கா.''

''சுதாவா? எப்படி இருக்கா?''

''ஒண்ணுமில்லே. எல்லாம் நான் பார்த்துக்கறேன்'' என்று சிடுசிடுத்தார்.

குளத்தில் கல்லை விட்டெறிந்த கதையாய் அவரின் தெளிந்த மனத்தில் ரகுராமன் கல்லை விட்டெறிந்து விட்டார்.



அலை அலையாய்க் குழப்பம். உண்மை முழுதும் தெரியாமல் எதையும் பேசவும் தயக்கம்.

மெதுவாக மாடி ஏறினார்.

யார் அந்தப் பையன்? ஒரு வேளை இதே தெருவில்தான் இருக்கிறானோ? அத னால்தான் படிக்கிறேன் பேர்வழி என்று சுதா எப்போதும் மாடியில் இருக்கிறாளோ? கண் காணிக்க வேண்டும். விபரீதமானால் அசிங்கமாயிற்றே?

மொட்டை மாடியின் வலது மூலையில் இவருக்கு முதுகைக் காண்பித்தபடி சுதா எதையோ எம்பிப் பார்ப்பது தெரிந்தது.

மாட்டிக் கொண் டாளோ...? கையும், கள வுமாய் வசமாய்ச் சிக்கி னாள்!

கிருஷ்ணா

பூனை நடையில் அவளை நெருங்கி.... அட, சட்! மாடியில் இருந்த கல்லில் கால் பட்டு, அது உருண்டு, சுதா திரும்பி.. போச்சு! எல்லாத் திட்டமும் காலி!

''என்னப்பா? வந்ததே தெரியலியே?'' என்றவளைத் தீர்க்கமாய்ப் பார்த்தார்.

முகத்தை எப்படி அப்பாவித்தனமாய் வைத்துக் கொண்டிருக்கிறாள்? இதைப் பார்த்துத்தானே இன்னும் சிறு பெண் என ஏமாந்து விட்டோம்....!

''என்ன பண்ற?''

''படிச்சுட்டு இருக் கேன்.''

''கையிலே புத்தகத் தைக் காணோம்?''

''அதோ'' என்று எதிரிலிருந்த கைப் பிடிச் சுவரைக் காட்டினாள். புத்தகம், அதன் மேலே சிறு கல்லும் இருந்தது பறக்காம லிருக்க.

''புத்தகத்தை அங்கே வைச்சுட்டு இங்கே எப்படிப் படிப்பாய்?'' என்றார் குத்தலாய்.

''கீழே ஏதோ தொம்முனு சத்தம் கேட்டுது. அதான் வேடிக்கை பார்த்தேன்.''

''ஓஹோ!''

''கோடி வீட்டு கணேஷ் இல்லை... பி.எஸ்ஸி. படிக்கிறானே... அவன்தான். யார் மேலோ சைக்கிளை மோதி....'' என்று சிரித்தாள்.

> "உன்னோட திருட்டுக்கெல்லாம் காரணம் உங்க ஏரியா ஜனங்கதானா...! எப்படி...?!"
>
> "நான் எலக்‌ஷன்ல நின்னப்ப எனக்கு வோட்டுப் போட்டு ஜெயிக்க வச்சிருந்தா, நான் ஏன் இந்தத் திருட்டையெல்லாம் செய்யப் போறேன், சொல்லுங்க...?"
>
> – சீர்காழி வி. ரேவதி



அப்படியானால்... கணேஷ்தானோ இவளுடன் நேற்றுச் சுற்றியவன்....?

இவருக்குள் ஒரு கணக்குப் போட்டுப் பார்த்தார்.

''என்னப்பா கூண்டுல நிற்க வைச்சுக் கேட்கற மாதிரி கேட்கறீங்க? கொஞ்சம் முன்பு கீழே அம்மாவிடம் கூட ஏதோ வேக மாப் பேசினது காதுல விழுந்ததே!''

கள்ளி! அனைத்தையும் கவனிக்கிறாள். குற்றமுள்ள நெஞ்சல்லவா? பயம்! அது தான் என் செயலைக் கூர்ந்து கவனிக்கிறாள்!

''என்னப்பா?''

நேரிடையாக விஷயத்துக்கு வரவும் தயக்கமாய் இருந்தது.

''ஆமாம்! காதலிக்கிறேன்'' என்று சொல்லி விட்டால்... உண்மையை எதிர் கொள்ளவும் பயமாய் இருந்தது.

''சரி சரி, கீழே வா'' என்றபடி படி இறங்கினார்.

''கடைசிப் பாடம். படிச்சிட்டு இதோ வந்துடறேன்'' என்ற சுதாவின் குரல் அவர் பின்னால் கேட்டது.

கீழே ஜானகி யாரிடமோ வம்படிப்பது காதில் விழுந்தது. யாராயிருக்கும்?

''ஒரே போர் போ பானு! என்ன படம் எடுக்கிறான்? எதிர் வீட்டு சீதா சொன்னா ளேன்னு போனேன். ஆ, ஊன்னு புகழ்ந்தாள் இதைப் போய். எதையும் நம்ம கண்ணோட்டத்துலதான் பார்த்து எந்த முடிவும் எடுக்கணும்னு புரிஞ்சிக்கிட்டேன். அடுத்தவங்க பேச்சை நம்பினால் இப்படித்தான்ப்ச்! இவரிடம் வேற இந்த அறுவைப் படம் பார்த்ததுக்குக் கொஞ்சம் முன்னாடி திட்டு, ஹ்ம்!''

பளிச்சென்று அவருக்குள் மின்னல்.

ரகுராமன் பேச்சினால்தானே தனக்குள் இவ்வளவு குழப்பம்! அவர் பேசியதை மனத்தில் பதித்துக் கொண்டு அப்படியே பார்ப்பதால்தானே சுதாவின் ஒவ்வொரு செயலும் சந்தேகமாய்ப் படுகிறது?

அவர் சுதாவைப் பார்த்தது உண்மையாய் இருக்கலாம். ஆனால் சுதாவை விசாரித்தால்தானே உண்மை தெரியும்.

ஒரு வேளை, சுதா தான் நினைப்பதைப் போல வெகுளியாகவே இருந்து விட்டால்....?

மாடியிலிருந்து சுதா வருவது தெரிந்தது.

''என்னப்பா, என்னாச்சு இன்னிக்கு உங்களுக்கு?''

''ஒண்ணுமில்லேம்மா! ஆபீஸ் டென்ஷன். எங்கேயாவது நான், உன் அம்மா, நீ மூணு பேரும் வெளியிலே போய் வரலாமா?''

''குட் ஐடியா!'' என்று குதூகலித்தாள்.

''ஐஸ்க்ரீம் பார்லருக்கு உன்னை கூட்டிட்டுப் போய் ரொம்ப நாளாச்சே. அங்கேயே போகலாமே'' என்றபடி சுதாவை நோக்கினார்.

''ம்... பரவாயில்லே....'' என்று யோசித்தவளைப் படபடப்பாய் பார்த்தார்.

''என்னம்மா?''

''அது... நேத்துத்தான் ஐஸ்கிரீம் சாப்பிட்டேன். அதான் யோசனை...''

''யாரோட போனாய்?'' என்றார் சஸ்பென்ஸ் தாங்காமல்.

''என் தோழி மாலாவுக்கு நேற்று பிறந்தநாள். ஐஸ்கிரீம் பார்லர் கூட்டிட்டுப் போனாள். வழியிலே அவ அண்ணனைப் பார்த்தோம். அவனும் எங்களோட வந்தான். கம்ப்யூட்டர் படிக்கிறானாம். வயலின் கூட நல்லா வாசிப்பானாம். அவனைப் பற்றியே பேசி அறுத்துத் தள்ளிட்டா மாலா. ஒரே போர்'' என்று தோளைக் குலுக்கிய மகளை நிம்மதியுடனும் தன் குழப்பத்தை நினைத்து வெட்கத்துடனும் பார்த்தார்.

## சார்மினார் சானல் :



# பிரதமர் கிராமம் என்றால் சும்மாவா?

●● வாரங்கல் அருகே வங்காரா கிராமத்தில் பிரதமர் நரசிம்ம ராவுக்கு மூதாதையர் வழி வந்த வீடு இருக்கிறது. அவர் பிரதமரான பிறகு, வீட்டைப் பாதுகாக்க நூற்றுக்கு மேற்பட்ட ஆயுதக் காவல் படை கூடாரம் போட்டிருக்கிறது. காரணம் நக்ஸலைட்டுகளின் 'மக்கள் போர் அணி', நில உச்ச வரம்பு மீறி அவர் பூமி வைத்திருக்கிறார் என்று குற்றம் சாட்டியிருப்பதாகும். அவர் குடும்பம் இதை மறுக்கிறது. எனினும் ராவ் கிராமத்தில் போலீஸ் பாதுகாப்புத் தொடருகிறது. (அந்த குக்கிராமத்தில் போலீஸ் ஜவான்களின் ஒரே பொழுது போக்கு வாலிபால்.) காவல் படையின் இந்தக் கண்காணிப்புக்கு மாதம் மூன்று லட்சம் செலவு. இத்தனைக்கும் நரசிம்ம ராவ் இங்கு விஜயம் செய்து பத்து வருடங்களாகின்றன. அவரது பெண், பிள்ளைகள் வெளியூர்களில். பந்தோபஸ்து ஒரு பிரஸ்டீஜ் விஷயம் போலும்!

கொசுறு : நரசிம்மராவ் புதல்வர் ரங்கராவ், ஆந்திர அரசில் கல்வி அமைச்சர். காபினட் அமைச்சர்கள் ஒருவருக்கும் இல்லாத 'புல்லட் துளைக்காத கார்' அந்தஸ்து அவருக்குண்டு!

●● மேடக் ஜில்லாவில் ருத்ரம் என்னும் இடத்தில் 'அல் கபீர் எக்ஸ்போர்ட்ஸ்' என்ற ஸ்தாபனம் பிரும்மாண்டமான கசாப்பு யந்திரசாலையை நிறுவியுள்ளது. பலகோடி முதலீடு. ஒரு மாதத்துக்கு 15,000 மாடுகள் தவிர, ஆயிரக்கணக்கான ஆடுகளையும் வெட்டி, வளைகுடா நாடுகளுக்கு டன் டன்னாக மாமிச ஏற்றுமதி செய்யத் திட்டம். வெறும் ஏற்றுமதி வருமானத்திற்காக ஆந்திர அரசின் தொழில் இலாகா, இந்தப் பலிக்களத்திற்கு அனுமதி தந்து விட்டதா என ஜீவகாருண்யத்தாரின் எதிர்ப்பு!

பிராணிகள் வதை தடுப்புச் சட்டம் (1977) விதிகள் பிரகாரம் ஒரு விலங்கினை டாக்டர் 'அடிமாடு' என்று ஸர்டிபிகேட் செய்த பிறகுதான், எதுவும் கொல்லப் படலாம். ஆனால் நடைமுறையில் இது அனுசரிக்கப் படுவதில்லை. சரியானபடி விதிகள் கண்காணித்தால், அல் கபீருக்கு மாடுகளே கிடைக்காது; மூடநேரிடலாம். ஆனால் அரசு கண்களை மூடிக் கொண்டால் என்ன செய்ய முடியும்? அதனால்தான் கோ சம்ரக்ஷண சங்கம், பிராணிகள் நல அமைப்புகள், வெஜிடேரியன் உணவு ஆதரவாளர்கள் ஆகியோர் கசாப்பு யந்திர அரிவாளுக்கு எதிராகப் 'போராட்ட வாள்' தூக்கி உள்ளனர்.

சென்ற மாதம் 'அல் கபீரில் வெள்ளோட்டம் நடைபெற்றது. சுகாதாரத்திற்காக மாடுகளை 24 மணி நேரம் பட்டினி போட்டு, யந்திரத்தால் (வலியின்றி!) வெட்டி பாக் செய்தார்கள்! இத்தனைக்கும் அல் கபீர் உரிமையாளர் ஒரு ஜெயின். ஜீவ காருண்யத்திற்குப் பெயர் போன ஜெயின் சமூகம் அவரை மத நீக்கம் செய்துள்ளது. ஆயினும் ''தொழில் வேறு, மதம் வேறு'' என்கிறார் ஜெயின்.

- சுபஸ்ரீ

''நானும் அந்த நீல பனியன் ஆசாமியும் காசில்லாமல் நாலு இட்லி பூரியும், காப்பியும்தான் சாப்பிட்டோம்! அவரை மேஜை துடைக்கச் சொல்லிட்டு என்னை மாவாட்ட விட்டுட்டீங்களே! நியாயமா முதலாளி?''

''பின்னே! ஹார்ட் வீக்குனு அவர் டாக்டர் சர்ட்டிபிகேட் காண்பிச்சார்; நீங்க வெச்சிருக்கீங்களா சொல்லுங்க!''

- எஸ். ரமேஷ்



**15**

# பாப்கார்ன் கனவுகள்

ம.வே.சிவகுமார்

ஆற்றின் குறுக்கே அரைகுறையாய்க் கட்டப்பட்ட கவர்ன்மெண்ட் பாலம். வேலை நடப்பதற்கு சாட்சியாய்க் கம்பி நீட்டி, தூண்கள் நிற்கின்றன. சுற்றிலும் தண்ணீர் சலசலத்து ஓடுகிறது. உயரே தெரிகிற குடையின் கீழ் டைரக்டர் இருக்கிறார். அவரை லொக்கேஷனில் பார்த்துப் பேசினால் காரியம் நடக்கும். மேலேயிருந்து ஒரு நூலேணி காற்றில் ஆடுகிறது. தோளில் காமிரா சுமந்து அதில் ஒருவன் ஏறிப் போகிறான். அலுமினியக் கெட்டிலில் தண்ணீர் போகிறது. தளுக்கிக் குலுக்கி கதாநாயகி போகிறாள். அவளை அணைத்தாற் போல் கதாநாயகன் பின் தொடர்கிறான். பக்கத்துத் தூண் பரப்பில் பாடல் வரிக்கு இருவரும் படுத்திருப்பது போல் காட்சி. விஷயம் ஊரில் பரவி விவசாயிகளுக்குப் பொது விடுமுறை. காற்றில் நூலேணி ஆடுகிறது.

''ஏறலே?''

அழைத்து வந்த பிரான்ஸிஸ் ராஜ் கேட்கிறான். எங்கிருந்தோ வந்தான். சினிமாக்காரன் நான் என்றான். டீ, சிகரெட் வாங்கிக் கொடுத்தால் நாள் பூராவும் கூடவேயிருக்கிறான். காலை அலுவலகம் வந்த போதே பீச் ஸ்டேஷனில் காத்திருந்தான். அவன் சொற்படி லொக்கேஷனில் டைரக்டர் பார்க்க சோழிங்கநல்லூர் வந்தாகி விட்டது. ஸ்பீக்கரில் பாடல் வரிகள் ஒலிக்கின்றன. முடிவதற்குள் விசில் சப்தம். பின்னணியில் பல வர்ண சொற்ப உடைகளில் ஒடிக் களைத்த நடனப் பெண்மணிகள். பார்த்தால் பசி தீரும் கிராமவாசிகள். சப்தமெழுப்பும் ஐஸ்காரன். கும்பலில் முளைத்த வேர்க்கடலைக் கடை.

மதியம் ஒரு மணிக்கு நூலேணியில் உலகம் சாப்பாட்டுக்கு இறங்குகிறது. யாரிடமோ சிரித்துப் பேசி பிரான்ஸிஸ் ராஜ் சேர்ந்து கொள்கிறான். மரத்தடியில் நடிகர்கள் சாப்பிடுவதைப் பொதுமக்கள் அரண்கட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். லக்ஷ்மிநாராயணன் தொலைவில் உணவு முடித்த டைரக்டர் கண்களில் படும்படி நின்று கொள்கிறான். அவன் எதிர்பார்த்த படியே டைரக்டர் அவனைக் கண்களில் அழைக்கிறார்.

''வணக்கம் சார். லக்ஷ்மிநாராயணன். பாங்க் ஆப் குஜராத். சினிமாவில் நடிக்கணும்னு ஆசை சார். நல்லா நடிப்பேன். டிராமாவிலே பெரிய கப் பிரைஸ் வாங்கியிருக்கேன். பராசக்தி வசனமெல்லாம் பேசுவேன் சார்.''

''பராசக்தியா? வயசு எவ்வளவு?''

''இருபத்தெட்டு சார்.''

''டான்ஸ் ஆடுவியா?''

''கத்துக்கிட்டிருக்கேன் சார், அன்னப்பன் மாஸ்டர் கிட்ட. ஃபைட் கூட டிரெய்னிங் எடுக்கறேன் சார்.''

''ம். இப்ப பாதி படம் எடுத்துட்டிருக்கேன். என்ன செய்யலாம்? அநேகமா எல்லா கேரக்டரும் யாருன்னு தீர்மானிச்சாச்சு. ஒண்ணு பண்ணுங்க. ப்ரீயாயிருந்தா ஷூட்டிங் வாங்க. நடுவிலே முடிஞ்சது பார்த்துச் செய்யறேன்.''

''ரொம்ப நன்றி சார்.''

டைரக்டர் கண் சாய்த்து விடை கொடுக்கிறார். ஜேஜே என்ற சூழ்நிலைக் கும்பலில், உடனடியாய் பிரான்ஸிஸ் ராஜ்



தெரியவில்லை. மீதம் உள்ள ஷூட்டிங் நாட்களில் விடுமுறை போட்டு விட வேண்டும். ஒரு முறை ஒரே முறை நிரூபித்து விட்டால் போதும். கல்கத்தாவில் கேட்ட கைதட்டல் காதுகளில் எப்போதும் ஒலிக்க வேண்டும். பார்க்கிறவர்கள் அனைவருக்கும் அவன் யாரென்று தெரிய வேண்டும். மாபெரும் சபையில் மாலைகள் விழ வேண்டும். லக்ஷ்மிநாராயணன் வெறும் குமாஸ்தா இல்லை. நடிகன், கலைஞன், அருமை அண்ணன். உக்கிர எண்ணங்களில் லக்ஷ்மிநாராயணன் நிற்கிறான். மேலே ஸ்பீக்கரில் சாப்பாடு முடிந்து, மீண்டும் பாடல் வரி ஒலிக்கிறது.

வில்லிவாக்கம் வீடு. பெரிய மாமனார் வந்திருக்கிறார். "மாலையில் மகள் மைத்ரேயியைப் பெண் பார்க்க மாப்பிள்ளை வீட்டார் வருகிறார்கள். மூன்று மணிக்கே புறப்பட்டு எல்லோரும் கே.கே. நகர் வந்து விட வேண்டும். அவசரம். காப்பியெல்லாம் வேண்டாம். அவர் உடனடியாய்த் திரும்பி ஏற்பாடுகள் செய்ய வேண்டும். கட்டாயம் மாப்பிள்ளைக்கும் தகவல் சொல்லி வரச் சொல்லுங்கள்."

ரயில் பாதையை ஒட்டி மருந்துக் கடை. மாலையில் அலுவலகம் முடிந்து நேரே கே.கே. நகர் வரச் சொல்லி லக்ஷ்மிநாராயணனுக்கு டெலிபோன் செய்யப் போன மாமனார், போன வேகத்தில் முகம் இருண்டு திரும்புகிறார். அலுவலகத்திற்கே அவன் அன்று வரவில்லை. விரக்தியில் மாமனார் வார்த்தைகள் உதிர்க்கிறார். வழக்கம் போல விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே புறப்படுவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கிறாள்.

கே.கே. நகரிலிருந்து கடைசி பஸ்ஸில் திரும்புகிறார்கள். வீட்டில் லக்ஷ்மிநாராயணன் இன்னும் வரவில்லை. வரவேற்பறையில் குழந்தை தூங்குகிறது. வேதனை



யில் அங்கலாய்த்து எதிர் வீட்டில் விளக்கு எரிகிறது. தெருக் கதவில் சைக்கிள் மோது கிறது. விஜயலக்ஷ்மி ஒரு தூள்ளலுடன் வாச லுக்கு ஓடுகிறாள்.

''தமிழன் இன்னிலேர்ந்து ஒரு மாசம் லீவ். போராட்டம் இறுதிக் கட்டத்துக்கு வந்து விட்டது. டைரக்டர் சான்ஸ் தர் ரேன்னு சொல்லியிருக்கார்.''

வெராந்தாவில் சைக்கிள் நிற்கிறது. லொட லொட என்று பேசிக் கொண்டே லக்ஷ்மிநாராயணன் பின்தொடர்கிறான். சமையலறையில் விஜயலக்ஷ்மி கேட்டுக் கொண்டே இரவு உணவு சூடு செய்கிறாள். உட்கார வைத்துப் பரிமாறிக் கொண்டே கே.கே. நகரில் மைத்ரேயியைப் பெண் பார்த்துப் போன விவரங்களைக் கூறு கிறாள்.

''விஜயலக்ஷ்மி.''

''உம்.''

''ஒரு ஸ்கூட்டர் வாங்கிக்கட்டுமா?''

''எதுக்கு?''

''இல்லே. இருந்தா நல்லாயிருக்கும். நாலு கம்பெனி ஏறி இறங்க லாம்.''

''நான் உட்காரக் கூடாதா?''

பொய்யான ஆதங் கம் காட்டி விஜய லக்ஷ்மி கேட்கிறாள்.

''தாராளமா. அசந்தா உங்கப்பாவே உட்காரலாம்.''

''காசு?''

''ஹிஹி. லோன்.''

''மாசம் எவ்வளவு பிடிப்பா?''

''கருக்கமாச் சொன்னா என் பெல் லியப் பிடிப்பான். அதை விடு. தமிழன் சமா ளிச்சுக்குவான். வாங்கிக்கட்டுமா சொல்லு. ஆசையாயிருக்கு.''

லக்ஷ்மிநாராயணன் குழந்தை போல் கேட்கிறான்.

''ப்ளீஸ்.''

விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே தலையாட்டுகிறாள்.

**பு**து ஸ்கூட்டர் செம்மண் மேடு ஏறி இறங்குகிறது. கையில் காய்கறிப் பையுடன் மாமனார் பார்த்துக் கொண்டே போகிறார். பயத்தில் விஜயலக்ஷ்மி கத்தக் கத்த புது ஸ்கூட்டரில் கோவிலுக்குப் போகிறார்கள். குழந்தை பின் சீட்டில் தாயின் மடியில் விஸ்வரூபத்தைப் பார்வையிடுகிறது.

விஞ்ஞானப் பரிசோதனைச் சாலை. நாயகனும், நாயகியும் தற்போது கல்லூரி மாணவர்கள். வெவ்வேறு மேஜைகளில் பரஸ்பரம் காதல் பார்வை வீசிப் பரி சோதனை செய்கிறார்கள். குண்டூசி அடித்த தவளை நடுவே கிடக்கிறது. நாயகியைப் பார்த்தபடி தவளையை இசகு பிசகான இடத்தில் கதாநாயகன் தொடுகிறான். தவளை ஒரு தாவலில் கதாநாயகியின் ஜாக் கெட்டிற்குள் விழுகிறது. குண்டு வாத்தியார் கோபத்தில் புஸ்ஸென்று மூச்சு விடுகிறார். சக மாணவியர் திக்பிரமையடைந்து பார்த் துக் கொண்டிருக்க கதாநாயகன், நாயகியை நோக்கி நடக்கிறான். விழுந்த இடத்தில் தவ ளையைத் தேடியெடுத்து வெளியே எறிகி றான்.

''கட்.''

சட்டையில் தவளை விழுந்த இடம் ஈர மாகி விடுகிறது. அருவருப்பில் லக்ஷ்மி நாராயணன் அலறுகிறான் அருகே அனைவ ரும் சிரிக்கிறதில் டைரக்டர் திரும்பிப் பார்க் கிறார்.

'அண்ணே. தயவு செஞ்சு தேவையில் லாத ஆளுங்களாம் வெளியே போயி டுங்க.''

தடித்த குரலில் புரொடக்ஷன் ஆள் விரட்டுகிறான். திரும் பிய லக்ஷ்மிநாரா யணனை டைரக்டர் அழைக்கிறார்.

''ஆபீஸ் லீவா?''

''ஆமாம் சார்.''

''எவ்வளவு நாளு?''

''இன்னியோட இருபத்தி மூணு நாள் சார்.''

''இருபத்தி மூணு நாளா?''

''ஆமாம் சார்.''

''அவ்வளவு கஷ்டமாம். உம்?''

டைரக்டர் சிரிக்கிறார். படப்பிடிப்பு இன்னும் இருபது நாட்கள் பாக்கியிருக் கிறது. எடுக்க வேண்டிய காட்சிகளும் நிறைய இருக்கின்றன. லீவ் இருக்கிறது அல்லவா? தொடர்ந்து இது போல் வந்து கொண்டிருந்தால் அவர் முடிந்தது பார்த்துச் செய்வார்.

''என்ன வர்ரீங்களா?''

''நிச்சயம் வர்ரேன் சார்.''

மகிழ்ச்சியில் காதுகள் சிவந்து லக்ஷ்மி நாராயணன் தலையாட்டுகிறான். செல வுக்கு ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டு வழி யில் பிரான்ஸிஸ் ராஜ் இறங்கிக் கொள் கிறான்.

**மெ**ய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண் துஞ்சார், கருமமே கண்ணாயினார்.

''உங்க மருமக பாடும்போது ஏன் திண்ணையிலே வந்து உக்காந்துக் கிறீங்க?''

''மாமியார் கொடுமை தாங்காம அலர்றதா யாரும் நினைக்கக் கூடாது பாருங்க...!''

- அபிஷேக்



"ஆரோக்கியமான அரசிய
லுக்கு நம்ம தலைவரு அருமையான
ஒரு வழி கண்டுபிடிக்கச் சொல்லிட்டாரு!"
"என்ன... என்ன...?"
"இனிமே நம்ம கட்சியிலே எல்லோரும்
'லைப்பாய்' தேய்ச்சுத்தான்
குளிக்கணும்னுட்டாரு!"
- வி. ராஜப்பா



படுக்கையறையில் உறக்கம் பிடிக்க வில்லை.

"விஜயலக்ஷ்மி."

"உம்."

"டைரக்டர் கண்டிப்பா சான்ஸ் தர்றேன்னு சொல்லியிருக்கார்."

"உம்."

"நான் ஜெயிப்பேனா?"

"ஓ!"

"நேத்திக்கு நம்ம எஸ்டேட்ல ஒரு பூ பூத்துதே ஞாபகமிருக்கா?"

வீட்டின் முன்பக்கம் போகாத பொழுதுகளில் விஜயலக்ஷ்மி சிறியதாய் ஒரு தோட்டம் போட்டாள். நட்டு வைத்த செம்பருத்தியில் நூறு குடம் தண்ணீர் ஊற்றி முதல்நாள் ஒரு பூ பூத்தது. அதைத் தான் லக்ஷ்மி நாராயணன் அவள் உடலை அருகில் வளைத்து, நினைவிருக்கிறதா என்று கேட்கிறான்.

"உம்."

பழக்கத்தில் விஜயலக்ஷ்மி தலையாட்டுகிறாள்.

"உன் மனசு பூவைப் பார்த்தப்போ எப்படி இருந்தது?"

"மஜாவா இருந்தது."

"அது வீட்டிலே பூத்த பூ. நாம பார்த்து மஜாவாயிட்டோம். ஆனா காட்டிலே எவ்வளவோ பூ யாருமே பார்க்காம மலர்ந்து காத்துலே அசைஞ்சு, காய்ஞ்சு போகுது. என் வாழ்க்கை வீட்டுப் பூ மாதிரி மத்தவங்க கவனத்துக்கு வரலாம். யாருமே பார்க்காத காட்டுப் பூ மாதிரி வெறும் சருகாக் காய்ஞ்சு போயிடலாம். ரெண்டுத்துக்குமே நீ தயாரா யிருக்கணும். சரியா?"

"உம்."

"இன்னும் இருபது நாள் லீவ் போடணும். போடட்டுமா?"

"உம்."

இருளில் லக்ஷ்மிநாராயணன் ஆறுதலுக்கு விரல்களைப் பிடித்துக் கொள்கிறான். அவன் உணர்வுகள் புரிந்தவளாக விஜயலக்ஷ்மி பதிலுக்கு அழுத்தம் கொடுக்கிறாள்.

"கண்ணை மூடிண்டு தூங்குங்கோ. கார்த்தால ஷூட்டிங் போகணும்."

ஸ்கூட்டரின் பெட்ரோல் செலவு, குழந்தையின் பால் டின் செலவு, பிரான்ஸிஸ் ராஜ் டீ, சிகரெட் செலவு என்று அடுத்த மாதம் முதல் வாரத்திலேயே லிங்கிச் செட்டித் தெருவில் விநாயகம் செட்டியாரின் ஃபைனான்ஸ் கம்பெனிக்கு மீண்டும் போகும் படியாகிறது. செட்டியார் விவரம் கேட்கிறார். லக்ஷ்மிநாராயணன் தன் லட்சியங்களை விவரிக்கிறான். கூட வந்த சுரேஷ் பாபு கையெழுத்துப் போட்டதில் கடன் ஆயிரம் ரூபாய் அதிகரிக்கிறது.

கொட்டிவாக்கம் பங்களா. இரவில் யாருக்கும் தெரியாமல் கதாநாயகன், நாயகியின் படுக்கையறையில் நுழைகிறான். குறும்பாய் அருகே படுத்துக் கொள்கிறான். உண்மையில் அங்கே நாயகியின் சற்றே வயதான அத்தை படுத்திருக்கிறாள். அவளுக்கு விழிப்பு வந்து வெப்பத்தில் நாயகனைத் துரத்த, அவளிடமிருந்து தப்புவதற்குள் அவனுக்குப் போதும் போதும் என்றாகி விடுகிறது.

"லக்ஷ்மிநாராயணன்."

டைரக்டர் கூப்பிடுகிறார்.

"சார்."

"நாளைக்கு உனக்கு சீன் இருக்கு. நல்ல கேரக்டர். உன் முயற்சிக்காக நாலைஞ்சு சீன்ல வர்ர மாதிரி டெவலப் பண்ணியிருக்கேன். ஆல் தி பெஸ்ட்."

"தாங்க்யூ சார்."

வணங்காமுடி லக்ஷ்மிநாராயணன் கால்களில் விழுகிறான். சீக்கிரமே புறப்பட்டு விஜயலக்ஷ்மியிடம் சொல்ல வேண்டும். ஒரு கிலோ முந்திரி அல்வா வாங்கிக் கொள்கிறான். அதைச் சாப்பிடும் போது மாமனார் முகம் எப்படிப் போகிறதென்று பார்க்க வேண்டும். ஸ்கூட்டரில் லக்ஷ்மிநாராயணன் வேகமாய் வருகிறான். அவன் ஆசைகளுக்குக் குறுக்காகத் திருப்பத்தில் ஒரு லாரி வருகிறது.

(தொடரும்)

# கேப்டன் மகள்

**கா**தலைப் பற்றிக் கவிதை பாட வேண்டிய பாரதிராஜா, துப்பாக்கி ஏந்திப் புலிவேட்டையில் இறங்கியதன் விளைவு :

அடர்த்தியான வனப் பிரதேசம். அதன் மத்தியில் தனிமைக் குடியிருப்பாக - விக்டோரியா மகாராணி காலத்தை நினைவு படுத்தும் வீடு. அதற்குத் தேவைப்படும் மின்சாரத்தை வழங்கும் காற்றாடி இயந்திரம் (விண்ட் மில்).

மலைப் பாதையில் சென்று வரக் குதிரைகள், ஜீப்புகள், காவலுக்கு அல்சேஷன். ஒரு மந்திரவாதியை நினைவுபடுத்தும் ஊமை வேலையாள். விநோத ஒலிகள். விபரீத அமைதி...

இந்தச் சூழ்நிலையில் ஓய்வுக்காகத் தங்க வரும் புதுமணத் தம்பதி.

அவர்களைத் தொடர்ந்து, பிரதமரைக் கொலை செய்யும் சதித் திட்டத்தில் ஈடுபட்டிருக்கும் தீவிரவாதிகள் சிலர் ஒளிந்திருப்பதற்காக அதே வீட்டைத் தேர்ந்தெடுக்க -

திகில்... திகில்... திகில்...!

கவர்ச்சிப் பாவையாகக் காட்சியளித்து வந்திருக்கும் குஷ்புவுக்குச் சவாலாக விளங்கும் குணச் சித்திரம். அவர் நிரூபணம் செய்திருப்பது : 'என்னால் முடியும் தம்பி.'

அடுத்து பளிச்சிடுபவர் நெப்போலியன்.

அவரைத் தொடர்ந்து ஜனகராஜ்.

பாவம் ராஜா. இசைக் கலைஞராக இடம் பெற்று, இசைக்கவோ, நடிக்கவோ வாய்ப்பில்லாமல் போகிறார்.

படம் முழுவதும் ஃப்ரேமுக்கு ஃப்ரேம் இயக்குனர்; அவருக்கே உரித்தான உத்திகள்.

கதையை மடலவிழச் செய்ய வேண்டிய அந்த உத்திகளே கதையாகிவிடும்போது -

மரத்தில் மறைந்தது மாமத யானை!



● கேப்டன் மகள்

# மறுபடியும்

**ம**றுபடியும் ஒரு ரெ. வா. குருவி. கட்டினவள் இருக்க, மற்றவளைத் தேடும் ஆண்களுக்குப் புத்தி சொல்லுகிற அதே சமாசாரம். அதிகம் விளைச்சல் கண்ட களம். ஆகவே அகல உழுவதற்குப் பதில் ஆழ உழுதிருக்கிறார் பாலு மகேந்திரா.

தமது தொழிலில் அதிகம் காம்ப்ரமைஸ் பண்ணிக் கொள்ள விரும்பாத, அதனாலேயே வாடகை வீட்டில் குடியிருக்கிற சினிமா டைரக்டர். அவர் மனைவியாக ரேவதி. 'ஸ்டெப்னி'யாக ரோகிணி.

காட்சிகளின் புதுமையில், கதையின் வைதீகத்தன்மையை மூடி மறைக்கும் டைரக்டருக்கு முதல் சபாஷ்.





* மறுபடியும்

இரண்டாவது சபாஷ் ரோகிணிக்கு. ஒரு முற்றிய ஹிஸ்டீரியாவாக, படம் முழுக்க அவர் பண்ணுகிற அட்டகாசங்கள் தமிழ் சினிமாவுக்கு ரொம்பப் புதுசு.

ரோகிணியின் வெறித்தனமான காதலை மறுக்க முடியாமல், ரேவதியின் உயிர்த் துடிப்புள்ள அன்பை மறக்க முடியாமல் மௌனப் போராட்டத்தில் நிழல்கள் ரவி. லேசில் ஒதுக்கிவிட முடியாத, ஜீவனுள்ள நடிப்பு.

ரேவதி. சந்தேகத்துக்கு இடமில்லாமல் பெண் சிவாஜி. கண்களில் நடிக்கிறார்.

பாதிக்கு மேல் வந்தாலும், பாதிக்கிறவர் அரவிந்த். அமுல் பேபி முகமும், அலட்டல் இல்லாத நடிப்பும்.

மருந்துக்குக் கூட காமெடி இல்லாமல், முதல் காட்சியின், முதல் ஃப்ரேமிலிருந்தே கதை ஆரம்பித்து, ஜெட் வேகத்தில் பறக்கிறது என்றாலும் குறைத்திருக்க வேண்டியது - காட்சிகளின் நீளம். நீக்கியிருக்க வேண்டியது - உடைகளில் வறுமை தெரியும் ஹைட்டி நடனம் - இது கலைப்படம் இல்லை என்பதைக் காட்டும் கறுப்புப் புள்ளி.

இசை - இளையவர் - இதம்.

காமிரா பற்றிப் புதுசாகச் சொல்ல ஒன்றுமில்லை - இது பாலு மகேந்திரா படம்.

எல்லாம் சரிதான்; ஆனாலும், தவிர்க்க முடியாமல் மனத்தில் தோன்றுவது இதுதான் :

முன்பு 'வீடு' கட்டியவர், இன்று குடிசை கட்டியிருக்கிறார்.

மொசைக் தரை போட்ட குடிசை!



## சின்ன மாப்ளே

கதை பற்றிக் கேட்காதீர்கள்! லாஜிக், இன்ன பிற தேவையில்லாத விஷயங்கள் பற்றி யோசிக்காதீர்கள். திடீர் திடீரென்று ஞாபகம் வரக்கூடும் பழைய படங்களை ஒதுக்கி, ஓரம் தள்ளுங்கள். உங்களை இரண்டு மணி நேரம் முழுசாகச் சிரிக்க வைக்கக் கூட்டணி அமைத்திருப்பவர்கள் பிரபு, விசு, ராதா ரவி அண்ட் கோ.

கூலித் தொழிலாளி பிரபுவை கிராமத்துப் பண்ணையார் ராதாரவிக்கு மாப்பிள்ளையாக்கும் தரகர் விசு. தொடர்வதான சிக்கல்களும், பிரபு-விசு சேர்ந்து அடிக்கும் கூத்தும் மட்டுமே படம்.

விசுவைப் பொறுத்த வரை சோளப் பொறி கேரக்டர். ஜாலியாகக் கொறிக்கிறார். படம் முழுக்க 'கமப்பவர்' பிரபு. சீரியஸ் காட்சிகள் தவிர, மற்றவற்றில் ஓ.கே. குறிப்பாக - அசடு வழிவதில் - டபுள் ஓ.கே.

திருமதி கூலியாக சுகன்யா. முறுக்குப் பட்ட பாடாய் வசனங்கள்.

தேவையில்லாமல் ரா.ரவி படம் முழுக்க எம்.ஆர். ராதா ஸ்டைலில் பேசி, நடிக்க முயன்றிருப்பது ஒரு கட்டத்துக்கு மேல் எரிச்சல் தருகிறது. கொஞ்சமாவது ஒரிஜினாலிட்டி வேண்டாமா சார்?



* சின்ன மாப்ளே

இசை, இளையராஜாவாமே! நம்புவது ரொம்பக் கஷ்டம். தூங்கின வாக்கில் பண்ணியிருக்கிறார் போலும்.

குறிப்பிட வேண்டியது கிரேஸி மோகன் வசனம். ஆள் மாறாட்ட சமாசாரத்தில் பிஎச்.டி பண்ணும் அளவுக்குத் தாம் சரக்குள்ளவர் என்பதை மீண்டும் நிரூபித்திருக்கிறார்.

படம் சந்தானபாரதியுடையதாம்!

சிரிப்பை முதலீடு செய்திருப்பவர் கிரேஸி.

– சி. ஆர். கே., ஆர். பி. ஆர்.

# பாலம்

●● மார்க்கண்டேய மகரிஷியைப் பற்றிய விவரங்களை அறிய ஆசை. (மார்க்கண்டேய புராணத்தில் இவை இல்லை.) இது தொடர்பான நூல்கள் அனுப்பி வைத்தாலோ இருக்குமிடம் தெரிவித்தாலோ நன்றியுடையவனாவேன்.

– ஏ. சங்கரநாராயணன்,
1-A, நடராஜா தெரு,
தாம்பரம் சானடோரியம்,
சென்னை – 600 047.

●● வேறு வர்த்தகம் செய்து பொருளீட்டுமாறு நண்பர்கள் யோசனை கூறியும் ஆத்ம திருப்திக்காகப் புத்தக நிலையம் தொடங்கவே விரும்புகிறேன். இதற்கு ஏற்ற யோசனைகள், வழிமுறைகள் கூறி உதவ விரும்புவோருக்கு முகவரி :

– எம். ஜோஸப் ராஜ்,
7/21, மேல வீதி,
திருப்பெருந்துறை – 614 618.
புதுக்கோட்டை (மா.வ)

●● ஒரு பிரிண்டிங் பிரஸ்ஸுக்குத் தேவைப்படுகிற அனைத்து ரக மர டைப்புகள், மர ரேக்குகள், மற்றும் வெர்கோ மிஷின் உடனடி விற்பனைக்குத் தயாராக உள்ளன. தேவைப்படுவோர் தொடர்பு கொள்ள முகவரி :



– ஏ.வி. ஸ்ரீனிவாசன்,
96, சித்தம்மாள் காலனி,
கோபிசெட்டிபாளையம்.

●● ரெயில்வே ரெக்ரூட்மெண்ட் போர்டு பரீட்சைக்கான புத்தகங்கள் மற்றும் பல பரீட்சைகளுக்கான புத்தகங்கள் மலிவு விலையில் கிடைக்கும். விவரமறியத் தொடர்பு கொள்ளவும்.

– பி. பால்பாண்டி,
190-B, காந்திஜி நகர்,
திருத்தங்கல் – 626 130
சிவகாசி (வழி).

●● எங்கள் ஊரில் விநாயகப் பெருமானுக்கும் ராமர் கோவிலிலும் தினசரி பூஜை செய்ய ஒருவர் தேவை. எந்த ஜாதியானாலும் சரி - முட்டை கூடத் தொடாத சைவராக இருக்க வேண்டும். முறைப்படி பூஜை செய்யத் தெரிந்தவராக இருக்க வேண்டும். தங்க வீடு இலவசம். மாதம் ரூ. 450 ஆரம்பச் சம்பளம்.

– செ.ந. ஆறுமுகக் கவுண்டர்,
செல்லப்பம்பாளையம் (அஞ்சல்),
புங்கமுத்தூர் (வழி),
உடுமலைப்பேட்டை (வட்டம்),
638 207.

●● கம்ப்யூட்டரில் NCVT பரீட்சை எழுத ஆசை. (National Council for Vocational Training) எப்படி அப்ளை செய்வது, படிப்பது என்று ஏற்கெனவே இப்பரீட்சை எழுதியவர்கள் கடிதம் எழுதி உதவுமாறு வேண்டுகிறேன்.

– இரா. வேங்கடராமன்,
1/160 F, அஜந்தா இல்லம்,
காட்டுப்பரமக்குடி,
பரமக்குடி – 623 707.
ராமநாதபுரம் (மா.வ)

●● B.Com., B.A. (Corp.), I.C.W.A.I (Inter), A.C.S (Inter) படிப்பவர்கள், Costing, company accounts, management accounts இவற்றில் ஏதாவது சந்தேகம் இருந்தால் தொடர்பு கொள்ளலாம். இலவசமாக சந்தேக நிவர்த்தி செய்கிறேன். டியூஷனும் எடுக்கப்படும்.

– வி. பாலாஜி,
D-148, ஹிந்து காலனி,
நங்கநல்லூர்,
சென்னை – 600 061.

●● சென்ற தீபாவளிக்கு சென்னை புரசைவாக்கத்தில் உள்ள ''மதார் ஷா'' துணிக்கடையில் ஒரு சட்டைத் துணி எடுத்தேன். பில் போட்டு வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து பார்த்தால் சட்டைத் துணிக்குப் பதில் சேலை! எப்படி மாறியதோ புரியவில்லை. சட்டைத் துணியைக் கொடுத்துவிட்டுப் புடைவையைப் பெற்றுக் கொள்ள, புடைவையைத் தொலைத்தவர் தொடர்பு கொள்ள முகவரி :

– டி. சந்திரன்,
48, ராமன் தெரு,
விழமங்கலம்,
பண்ருட்டி.

---

*(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது.)*

!! டாக்டர்கள் ப்ரிஸ்க்ரிப்ஷன் எழுதும் தாளில் ℞ என்ற குறி பார்த்திருக்கிறோம். இக் குறி வியாழன் கிரகத்துக்கு உரியதாகும். பண்டைக் காலத்தில் இக் கிரகமே ஆரோக்கியத்தைப் பேணியதாக நம்பினார்கள்.

!! Pole Vaulting எனப்படும் விளையாட்டில் (நீண்ட கோலின் உதவியுடன் மிக மிக உயரம் தாண்டுதல்) ஈடுபடுபவர், நுரை மெத்தையில் வந்து விழும் போது, அவரது தொடை எலும்புகள், சதுர இஞ்சுக்கு 20,000 பவுண்ட் வரை அழுத்தத்தைத் தாங்கிக் கொள்கின்றன.

!! காட்லிங்கன் என்பதுதான் முதல் இயந்திரத் துப்பாக்கி. இதனை உருவாக்கிய டாக்டர் ரிச்சர்ட் காட்லிங் மருத்துவத்தில் பட்டம் பெற்றவர். ஆனால் டாக்டராக அவர் பணியாற்றவேயில்லை!

!! ஜார்ஜ் வாஷிங்டனுக்குக் குழந் தைகள் இல்லை. இவர் மனைவி மார்த்தாவுக்கு முதல் திருமணத்தின் மூலம் குழந்தைகள் பிறந்திருந்தன. மார்த்தாவை ஜார்ஜ் வாஷிங்டன் மணந்த போது அப் பெண்மணி, இறந்து போன கணவரிடமிருந்து பெற்ற 17,000 ஏக்கர் நிலத்துக்கும் 300 அடிமைகளுக்கும் சொந்தக்காரராயிருந்தார். வர்ஜீனியா மாநிலத்தின் அப்போதைய மிகப் பெரிய பணக்காரி அவர்தான்.



✱ ஹெலன் கெல்லர்



✱ வாஷிங்டன்

!! உலகில் இப்போது எங் கும் பயன்படும் டெசிமல் முறை எண்கள் அமைப்பு இந்தியாவில்தான் கி.மு. நான்காம் நூற்றாண்டில் உபயோகத்துக்கு வந்தது. பூஜ்யம் சின்னமும் உருவாக்கப் பட்டது.

!! சிறு பிராயம் முதலே பார்வையற்றவராக மட்டுமின்றி காது கேளாதவராகவும் இருந்த ஹெலன் கெல்லர் நுகரும் ஆற்றலைச் சிறப்பாக வளர்த்துக் கொண்டார். தமது வெவ்வேறு நண்பர்களின் வருகையை இந்தச் சக்தியைக் கொண்டே அவர் அறிந்து கொண்டார்.

!! ஸ்வீடன் நாட்டு அரசன் மூன்றாம் கஸ்டார் (Gustar III) காப்பியை விஷம் என நம்பினான். இதை நிரூபிக்க ஒரு 'உபாயமும்' செய்தான். மரண தண்டனை பெற்ற ஒரு கொலைகாரனுக்குத் தினமும் காப்பி அருந்தும் தண்டனை விதித்தான். மற்றொரு கொலைகாரனைத் தினமும் டீ அருந்தும்படி ஆணையிட்டான். இந்தச் சோதனையைக் கண்காணிக்க இரண்டு மருத்துவர்கள் அமர்த்தப்பட்டனர். மருத்துவர்கள் முன்னதாக இறந்து விட, அரசன் 1792-இல் கொலை செய்யப்பட்டான்! இதற்குப் பல ஆண்டுகள் கழித்தே குற்றவாளிகள் இறந்தார்கள். முதலில் இறந்தவன் டீ அருந்தியவனே! இருப்பினும் 1794, 1822 ஆகிய ஆண்டுகளில் ஸ்வீடனில் காப்பி அருந்துதல் மீண்டும் தடை செய்யப்பட்டது!

## பொன்னாலான குளியல் தொட்டி!

!! 1976 இல் ஒரு போலீஸ் நாயை நோக்கிக் குரைத்ததற்காகக் கைது செய்யப்பட்டார் ஓர் அமெரிக்கர். போலீஸ் காரின் பின்சீட்டில் இருந்த நாயைச் சீண்டிய அந்த நபரைக் கண்டிக்க முயன்றார் ஒரு போலீஸ்காரர். அந்த நபரோ கோபத்தில் போலீஸ்காரரை நோக்கியும் குரைத்து விட்டு அவர் கணுக்காலையும் கடித்து விட்டார்!

!! பொன்னாலான குளியல் தொட்டி, உலகிலேயே ஜப்பான் நாட்டில்தான் ஒரு ஓட்டலில் இருக்கிறது. இதன் மதிப்பு : சுமார் 150,000 பவுண்டுகள். இரண்டு நிமிடங்களுக்கு இதில் குளிக்க ஒரு பவுண்டு கட்டணம்.

தொகுப்பு : உதய்லால்




## 3. திருநாராயண பட்டரின் சீடன்

பிறப்பும் இறப்பும் எந்தக் காலத்திலும் மனிதனின் கைகளில் இருந்ததில்லை. ஆண்டவன் நிர்ணயித்திருக்கும் நேரம் வந்தாலொழிய மனித யத்தனம் வெற்றி பெற்றதில்லை.

அந்த உண்மையை மாறவர்மன் அன்று கண்கூடாகக் கண்டு உணர்ந்து கொண்டான். பாண்டிய வீரர்கள் ஒரே சமயத்தில் எறிந்த ஈட்டிகளால் அந்த வாலிபன் அப்போதே தீர்ந்தான் என்று எண்ணிய மாறவர்மன் ஏமாந்தே போனான்.

கண்ணிமைக்கும் நேரத்தில் தூணோடு தூணாகக் கீழே சரிந்து, தன் மீது பாய்ந்த ஈட்டிகளிலிருந்து தப்பிய வாலிபன், மீண்டும் எழுந்த போது அவன் கையில் அந்த நீண்ட வாளும் எழுந்து, ஓடி வந்த வீரர்களைத் தேக்கியது. வாலிபனின் கரமும் அந்த வாளுமாகச் சேர்ந்து காவலர்களுக்குச் சற்று தூரத்திலேயே நின்று போரிட வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தி விட்டதையும், கரகரவென அசுரவேகத்தில் சுழன்ற வாலிபனின் வாள் காவலரை அனாயாசமாகச் சமாளித்ததையும் கண்டான் மாறவர்மன். பாண்டிய வீரர்களோ மிகவும் சாமர்த்தியமான வாள் வீரன் தங்கள் எதிரில் நிற்பதையும் தங்களை அபாயம் நெருங்குவதையும் புரிந்து கொண்டார்கள்.

அறையின் மூலையில் சார்த்தி வைக்கப் பட்டிருந்த தனது வாளை எடுத்துக் கொண்டு மாறவர்மன் ஓடிவந்ததையும், வலது கோடியிலிருந்த அறையிலிருந்து எழுந்த அலறலையும் கவனித்த படியே போரிட்ட அந்த வாலிபன் விழிகளில் பளிச்சிட்ட ஒளி, அவன் சண்டையை விரைவில் முடித்துவிட எண்ணியதை உணர்த்தியது.

**விஷ்வக்சேனன்**

அதை உறுதிப் படுத்தும் வகையில் அதுவரை தடுத்துப் போராடிய அந்தவாள் திடீரென்று புதுவகையில் சுழன்று தாக்கத் தொடங்கியது.

எதிரில் நின்ற வீரர்களில் ஒருவனது கரம் திடீரென்று செயலற்றுக் தொங்கியது. மற்றொருவன் கரத்திலிருந்த வாள் பறந்து உப்பரிகையைத் தாண்டி இருளில் மறைந்தது. மற்றுமொருவன் கழுத்தில் வாள் வெட்டினால் அவன் பெருங்குரலெடுத்து அலற முயன்று சத்தம் ஏதும் வராமல் மயங்கி விழுந்தான்.

பட்பட்டென்று தனது வீரர்கள் விழுந்ததைக் கண்ட மாறவர்மன் நிதானத்தை அடியோடு இழந்ததால் தன் வாளுடன் முன்னே பாய்ந்தான். பாய்ந்த பிறகே தான் செய்தது எத்தனை ஆபத்தான செயல் என்பதை உணர்ந்தான். மாறவர்மனது வாள் வாலிபனது நீண்ட வாளின் சுழற்சியில் சிக்கி மீள இயலாமல் தவித்தது! பிறகு திடீரென்று விடுபட்டு, கூடத்தின் மூலையை நோக்கிப் பறந்தது. அதே கணத்தில் வாலிபனது வாள் மாறவர்மனது வலது தோளில் ஆழமாகப் பாய்ந்து வேகமாக இழுக்கப்பட்டது.

தோளில் இருந்து குருதி பொங்க, கூச்சலிட்டபடி கீழே விழுந்து புரண்ட மாறவர்மனைக் கண்ட மற்ற இரு காவலரும் இனி போராடுவதில் பயன் ஏதுமில்லை என்பதைத்



திட்டவட்டமாகப் புரிந்து கொண்டதால் திரும்பிப் படிகளிலிறங்கித் தடதடவென ஓடினார்கள். சில வினாடிகளில் கீழேயிருந்த புரவிகளிரண்டு மேலை மங்கலத்தை நோக்கிப் பறந்தன.

வாளைத் துடைத்து உறையிலிட்ட வாலிபன், கீழே விழுந்து கிடந்த மாற வர்மனை ஒருமுறை பார்த்தான். பின் வலது கோடியிலிருந்த அறையை நோக்கி விறு விறுவென்று நடந்தான்.

அறையின் வாசலில், கழற்றிப் போடப் பட்ட மலர்மாலை போல் விழுந்து கிடந்த அம்மங்கையின் அழகு அவனைப் பிரமிக்க வைத்தது. சீலையைப் பற்றிய ஒரு கை மடிந்தும் மற்றொரு கை நீண்டும் கிடந்த தாலும், குழல்கள் கலைந்து பின்புறம் புரண்டதாலும், சற்றே நெகிழ்ந்துவிட்ட அவள் ஆடைகள் வெளிப்படுத்திய சந்தன நிற மேனியின் காந்தி கவனத்தைக் கவர்ந்த தாலும் அவன் கற்சிலையாக நின்றான். ரத்தத்தில் ஊறிக் கிடந்த பண்பாடு, இந்த நிலையில் கிடக்கும் ஒரு பெண்ணை உற்றுப் பார்ப்பது தவறென்பதை சித்தத்தில் இடித் துக் காட்டியதாலும், தாமதிக்கும் ஒவ் வொரு வினாடியும் ஆபத்துக்கு அழைப்பு விடுப்பதாகும் என்று அறிவு கூறியதாலும் ஒருமுறை தலையை உலுக்கிக் கொண்ட வாலிபன், கீழே கிடந்த அம்மங்கையை சிறு குழந்தையொன்றைத் தூக்குவது போலத் தூக்கிக் கொண்டான்.

திரும்பிப் படிகளில் இறங்கி, கீழ்த்தளத் திற்கு வந்த வாலிபன் வாயிலை நோக்கி நடந்தான்.

இடது புறத்தில் நிறுத்தி வைக்கப்பட்டி ருந்த பாண்டிய ரதத்தை ஒருமுறை பார்த் தவன் ஒரு வினாடி சிந்தித்தான்.

பிறகு ரதத்தை அடைந்து அதில் அம்மங்கையை மெல்லக் கிடத்தியவன், ரதத்தின் சீலையைத் தொங்க விட்டான்.



சுற்றி வந்து சாரதியினிடத்தில் அமர்ந்து ரதத்தைச் செலுத்து முன் வாயைக் குவித்து ஒலியொன்றை எழுப்பவே, மறைவில் நின்றிருந்த அவனது புரவி அவனை நோக்கி ஓடிவந்தது. புரவி பின் தொடர அந்த ரதம் தோப்பைவிட்டு கனவேகத்தில் வெள்ளாற் றங்கரையை நோக்கிப் பறந்தது.

**சி**ங்கை கொண்ட சோழபுரத்தின் எல்லைப் புறத்திலிருந்த மரங்கள், பலமாக வீசிக் கொண்டிருந்த காற்றில், இருளில் 'ஹோ'வென்ற இரைச்சலுடன் அசைந்தாடி ஒருவித அச்சத்தை ஏற்படுத்தின. மரங்க ளிடம் விடைபெற்றுக் கொண்ட பழுத்த இலைகளும், காய்ந்த குச்சிகளும் கோட் டையின் வாசலை நோக்கிச் சென்ற பாதை யில் அடித்துச் செல்லப்பட்டு, அகழியில் விழுந்து மிதக்கத் தொடங்கின. கோட்டை வாசலில் தூக்கி நிறுத்தப் பட்டிருந்த மரப் பாலம், அதை இழுத்துக் கட்டியிருந்த இரும்புச் சங்கிலிகளை உலுக்கியபடி ஆடிக் கொண்டிருந்தது.

சுழன்றடித்த காற்றும் லேசான தூற லாகத் தொடங்கிய மழையும் வலுத்து. கோட்டை வாயிலில் இருந்த பந்தங்களை அணைத்து விட, அந்தப் பகுதி இருளடித்துக் கிடந்தது. கோட்டையின் வாசற் பகுதியில் காவலுக்கு நியமிக்கப்பட்டிருந்த வீரர்கள், மதிலின் உட்பகுதியில் மழைக்கு அஞ்சி ஒதுங்கி நின்றாலும் அம்பெய்வதற்கு ஏற்பட்ட துவாரங்கள் வழியாக அவ்வப் பொழுது சாலையைக் கவனித்தபடி இருந் தார்கள். அவர்களில் ஒருவன் திடீரென்று குரல் கொடுத்தான்: ''யாரோ ஒருவன் வரு கிறான்.''

மழைக்கு ஒதுங்கியிருந்த எல்லா வீரர்களும் சட்டென்று தங்கள் தங்கள் நிலை களை நோக்கி ஓடிச் சென்று அங்கிருந்து பார்க்க, சாலையில் புரவியொன்றின் மீது ஒருவன் கோட்டையை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

அகழியின் மறுபுறத்தில் வந்து நின்ற வன் பாலத்தை இறக்குமாறு குரல் கொடுத் தான்.

வீரர்களை விலக்கிக் கொண்டு வந்த கோட்டைக் காவல் தலைவன் படிகளில் ஏறிக் கோட்டையின் உச்சிப் பகுதியை அடைந்தான்.

அகழியின் மறுபுறத்தில் நின்றவன் கோட்டையின் உச்சியில் வந்து நின்ற தலை வனைக் கண்டதும் மழையில் நனைந்த படியே தன் வாளை உருவி அரைவட்ட மாகக் காற்றில் வீசினான். அவன் இடது கரமும் உயர்ந்து வலமும் இடமுமாக அசைந்தது.

அந்த சமிக்ஞையைக் கண்டு பதறிய தலைவன் கீழே இறங்கி ஓடிவந்தான். காவ லரை அழைத்து பாலத்தை இறக்க உத்தர விட்டான். தானே சென்று கோட்டைக் கத வையும் திறக்க முற்பட்டான். பாலத்தின் மீது ஏறிக் கடந்து உள்ளே நுழைந்தவனைப் பந்தங்களின் ஒளியில் தெளிவாகக் கண்ட வீரர்களின் முகத்தில் உற்சாகம் பிறந்தது. ''ஜெயந்தன் ஜெயந்தன்'' என்ற குரல்களும் ஒலித்தன. ஆனால் அதே சமயத்தில் அவர் களுக்குச் சற்று திகைப்பும் ஏற்பட்டது. காரணம், குதிரையைவிட்டு இறங்கிய ஜெயந்தனது உடை சில இடங்களில் கிழிந் திருந்தது. இரண்டொரு இடங்களில் உறைந்து கிடந்த ரத்தக் கறைகளும் கிழிந்து தொங்கிய உடையும், தலைவனுக்கும் மற்ற வீரர்களுக்கும் ஏற்படுத்திய திகைப்பை லட்சியம் செய்யாத ஜெயந்தன், தலைவ னைப் பார்த்து, ''தலைவரே, அமைச்சர் அரண்மனையில் இருக்கிறாரல்லவா?'' என்று வினவினான்.

அவன் கேள்விக்குப் பதில் கூறாத கோட்டைத் தலைவன் அவன் உடையைச் சுட்டிக் காட்டி ''என்ன இது ஜெயந்தா?'' என்றான்.

''இப்போது விளக்கமாகக் கூற நேர மில்லை தலைவரே! நான் உடனடியாக அமைச்சரைச் சந்திக்க வேண்டும்'' என்று கூறியபடியே வீரர்களை விலக்கிக் கொண்டு மீண்டும் தன் புரவியில் தாவி ஏறினான் ஜெயந்தன். அரண்மனையை நோக்கி அவன் விரைவது கண்டு தலைவன் தன் புரவி யையும் கொண்டு வருமாறு வீரர்களைப் பணித்தான். ஏதோ விபரீதம் நேர்ந்திருக்கிற தென்பது புரியவே, கொட்டும் மழையைப் பொருட்படுத்தாமல், தானும் அரண் மனையை நோக்கி விரைந்தான்.

கோட்டைத் தலைவன் அரண் மனையை அடைந்த போது, விளக்குகள் அவசரமாக ஏற்றப்பட்டிருந்தன. பணியா ளர்கள் முகத்தில் அச்சம் விரவிக் கிடக்க அங்குமிங்குமாக நடமாடினார்கள். பாதி உறக்கத்தில் எழுந்து வந்திருந்த அரண்மனை ஸ்தானிகர் கல்லில் செதுக்கிய சிலையாக நின்று கொண்டிருந்தார்.

கோட்டைத் தலைவன் உள்ளே நுழைந்து அவரை உலுக்கிய பிறகே அவர் நினைவு திரும்பியது. அவர் விழிகளிலும் அச்சம் படர்ந்திருந்தது. அவர் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களும் குழறலாக ஒலித்தன. ''தலைவரே, கோட்டைத் தலைவரே'' எனக் குழறிய அவர் கையைப் பற்றி மீண்டும் உலுக்கிய தலைவன், ''என்ன நேர்ந்தது?'' என்று இரைந்தான்.

திருதிருவென விழித்த ஸ்தானிகர் தலைவனது கையைப் பற்றி, தரதரவென இழுக்காத குறையாக அழைத்துப் போய்

*"சர்வர்...! அங்கே என்னப்பா கலாட்டா...?"*
*"இந்த டேபிளை விட்டு சாம்பார் வாளியை எடுக்கக் கூடாதுன்னு தகராறு பண்றார் முத வாளி...!"*

*– சீர்காழி வி. ரேவதி*



மேன்மாடத்தில் ஓர் அறையின் வாசலில் கொண்டு வந்து நிறுத்தினார்.

உள்ளிருந்து பேரமைச்சரின் குரல் உக்கிரமாகவும் பலமாகவும் ஒலித்துக் கொண்டிருந்தது.

''அத்தனை துணிவு வந்துவிட்டதா பாண்டியனுக்கு? எப்போது இது நடந்தது?''

ஜெயந்தன் பதில் கூறிக் கொண்டிருந்தான்.

''நேற்று முன்னிரவில் பிரபு. இத்தனை நேரம் மேலைமங்கலத்தில் போர் முடிந்திருக்கும்.''

வெளியில் நின்ற கோட்டைத் தலைவனுக்கு விஷயம் அரைகுறையாகப் புரிந்து விட்டதால் வெகு வேகமாக அறைக்குள் நுழைந்தான். அமைச்சரை வணங்கவும் மறந்தவனது கேள்வி ஜெயந்தனை நோக்கிப் பாய்ந்தது. ''ஜெயந்தா, மேலை மங்கலத்தைப் பாண்டியர் கைப்பற்றி விட்டார்களா?''

''ஆம் தலைவரே'' என்றான் ஜெயந்தன். சிறிது தயங்கி, பிறகு தாமதிப்பதால் ஆவதென்ன என்று எண்ணியவன் போல், ''பொன்னமராவதித் தலைவனும் உதவிக்கு வந்து கொண்டிருக்கிறான்'' என்றான்.

''என்ன?'' - கோட்டைத் தலைவன் குரலில் அதிர்ச்சி இருந்தது.

''அதுமட்டுமல்ல!''

''இன்னும் என்ன?''

''கொற்கையிலிருந்தும் படை கிளம்பி வருகிறது.''

அறையில் கனத்த மௌனம் நிலவியது. ஜெயந்தனது முகம் இன்னும் ஏதோ முக்கிய சேதி இருப்பதைக் காட்டியது. அதை அவன் கூற முற்படு முன் கோட்டைத் தலைவனது குரல் குறுக்கிட்டது: ''ஏன் இதை நீ முன்னமே தெரிவிக்கவில்லை?''

''தலைவனை நன்றாக ஏறெடுத்து நோக்கிய ஜெயந்தன், ''நான் நேற்று பிற்பகல் வரை பாண்டியரிடம் சிறைப்பட்டிருந்தேன் தலைவரே'' என்றான்.

ஜெயந்தனை உற்று நோக்கியபடி சிந்தனை வசப்பட்டிருந்த அமைச்சர், ''ஜெயந்தா, நீ கூறவந்ததை முழுவதுமாகச் சொல்'' என்று ஆணையிட்டார்.

சற்று நிதானித்த ஜெயந்தன் தொடர்ந்தான் : ''பிரபு, பாண்டியர் படை திரட்டும் முயற்சியைப் பற்றி அறிந்து வர தாங்கள் அனுப்பியது முதல், நான் கோட்டாற்று மாறவர்மனையும், மார்த்தாண்டனையும் தொடர்ந்தேன். கொற்கைப் படையில் பாதியைச் சாதாரண மக்களைப் போல் வந்து மேலைமங்கலத்துக்கருகில் கூட ஏற்பாடு செய்தான் மார்த்தாண்டன். சற்று பலமான கோட்டையான மேலைமங்கலத்துக் கோட்டையைப் பிடித்தபின் கங்கை கொண்ட சோழபுரத்தையும் தாக்குவது அவன் திட்டம். இடையில் மாறவர்மன் பிரிந்து திருவகிந்திரபுரத்தை நோக்கிச் சென்ற போது, அவனைத் தொடர்ந்த நான் பிடிபட்டேன். தப்பி வந்த பிறகே அவன் நமது இளவரசியாரைக் கடத்திச் சென்று விட்டதை அறிந்தேன்.....''

ஜெயந்தன் வார்த்தைகளை முடிக்கு முன் அமைச்சர் திடுக்குற்று எழுந்தார். ''என்ன! என்ன!'' என்று பதறினார். ஜெயந்தன் தான் அறிந்ததை மறுபடி கூறி உறுதிப்படுத்தவும், படபடவெனப் பொரிய ஆரம்பித்தார் : ''உயிரை வெறுத்து விட்டானா மாறவர்மன்? அவனையும் அவன் கோட்டாற்றையும் எரித்துச் சாம்பலாக்கி விடுகிறேன். இல்லையெனில் நான் நம்பிப் பல்லவராயனில்லை!'' - நிதானமிழந்ததால் அவர் குரல் சற்று நடுங்கியது.

கோட்டைத் தலைவனது நிலையோ சொல்லத்தரமற்றதாயிருந்தது. அவனது பெரும் மீசை மட்டுமல்லாது முகம் முழுதுமே துடித்துக் கொண்டிருந்தது.

அமைச்சரின் அடுத்த கேள்வி கோட்டைத் தலைவனை நோக்கிப் பாய்ந்தது. ''தனஞ்செயா, இங்கிருக்கும் படைகள் போதுமா? அல்லது தஞ்சைக் காவற் படையையும் வரவழைக்கவா?'' அமைச்சர் நிதானத்தை இழந்திருந்தது தெளிவாகத் தெரிந்தது. குறுக்கே புகுந்தது ஜெயந்தன் குரல்.

''பிரபு, உணர்ச்சிவசப் பட வேண்டாம். தக்க துணைபலம் இல்லாமலா பாண்டியன் நம்மைத் தாக்கவும், இளவரசியைச் சிறையெடுக்கவும் துணிவான்?''

ஜெயந்தனது வாதத்தில் நியாயமிருப்பதாகப் பட்டது அமைச்சருக்கு. அவசரப்பட்டு ஆழம் தெரியாமல் காலைவிட்டு விட்டு அவதிப்படக் கூடாதல்லவா? நிதானித்தார். ஜெயந்தன் தொடர்ந்தான்.

''பிரபு. முதலில் இளவரசியைக் கண்டு பிடித்து மீட்க வேண்டும். மீட்ட பிறகு மாறவர்மனை அழிப்பது பற்றிச் சிந்திக்கலாம். இந்தச் செய்தி பரவினால் நமக்குச் சொல்லொணா அவமானம்.''



"உங்களுக்கு ஏதாவது பிரச்னைன்னா என்கிட்ட சொல்லுங்க... அதை விட்டுட்டு, அடுக்களையில பாத்திரத்தைப் போட்டு உடைக்கிற வேலையெல்லாம் வெச்சுக்காதீங்க!"

- சீர்காழி வி. ரேவதி

''உண்மைதான் ஜெயந்தா. நானும் சற்று நிதானமிழந்து விட்டேன். முதலில் இளவரசியை எந்த ஆபத்துமின்றி மீட்க வேண்டும்'' என்றார் அமைச்சர்.

அதே நேரத்தில் அரண்மனை வாயிலில் அரவம் கேட்டது. வீரன் ஒருவன் சொட்டச் சொட்ட நனைந்தபடி ஓடிவந்தான். அமைச்சரையும் கோட்டைத் தலைவனையும் வணங்கி விட்டுக் கூறினான் : ''பிரபு. கோட்டை வாசலில் ரதமொன்று வந்திருக்கிறது. பார்வைக்குப் பாண்டியர் ரதமாகத் தெரிகிறது!''

அமைச்சரும் தனஞ்செயனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அந்த வீரன் மேலும் கூறினான் : ''பிரபு, ரதத்தைச் செலுத்தி வந்தவன் கவி நாராயண பட்டரின் பெயரைக் கூறுகிறான்.''

சோழ இளவல் விக்கிரமச் சோழனுக்கு அரசியலையும் போர்க் கலையையும் கற்றுக் கொடுத்தவரும், பெரும் கவியாக இருந்தாலும் இலக்கியத்தை விடப் போர்க்கலையில் அதிக நாட்டம் கொண்டவருமான கவி நாராயண பட்டர், பிற்காலத்தில் ''குலோத்துங்க சரிதை''யென்ற நூலையெழுதி திரிபுவனியென்னும் ஒரு ஊரையே பரிசிலாகப் பெறப் போகிறவர் என்றாலும் இன்றே அவரது பெயர் சோழ நாட்டில் பிரசித்தமாகத்தான் இருந்தது.

சோழ நாட்டிற்கு முதல் தர வீரர்கள் பலரை உருவாக்கித் தந்து கொண்டிருந்த கவியின் பெயர் எந்த அரண்மனையையும் திறக்கும் வல்லமை பெற்றிருந்தது.

கவியின் பெயர் உச்சரிக்கப்பட்ட மாத்திரத்திலேயே பெரும் நிதானத்தையும் ஆறுதலையும் அடைந்துவிட்ட அமைச்சர், அந்த வீரனிடம், ''ரதத்தை உள்ளே அனுப்பு'' என்று உத்தரவிட்டார்.

கோட்டைத் தலைவனான தனஞ்செயனும் அமைச்சருடன் அரண்மனை வாயிலை நோக்கி நடந்தான். ஜெயந்தன் சிந்தனை படர்ந்த முகத்துடன் அவர்களைத் தொடர்ந்தான்.

அரண்மனை ஸ்தானிகர் திருதிருவென விழித்தபடி நின்றிருந்தார்.

சற்று நேரத்தில் மழையில் நனைந்தபடியே ரதம் ஒன்று வாயிலில் வந்து நின்றதை அமைச்சர் கண் கொட்டாமல் பார்த்தார். ஜெயந்தனது பார்வை ரதத்தைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த புரவியின் மீது சென்றது.

ரதத்திலிருந்து இறங்கிய வாலிபனைக் கண்ட அமைச்சர் நம்பிப் பல்லவராயர் அவனது அசாத்திய உயரத்தையும், நீண்ட வாளையும் கண்டு லேசான சந்தேகச் சாயை முகத்தில் படர நின்றார். அவனை இதற்கு முன் பார்த்திருப்பதான நினைவு ஒன்றும் அவர் மனத்தில் எழுந்தது.

வாலிபன் அமைச்சரை அணுகி, ஈரம் சொட்டிய தலையை வணங்கி நிமிர்த்தினான்.

''பேரமைச்சருக்கு வணக்கம். நான் காஞ்சியிலிருந்து வருகிறேன்'' என்றான் அவன்.

அவன் கூறியதைச் செவிகளில் வாங்கிக் கொண்ட அமைச்சர், அவனைப் பற்றிய விவரத்தைக் கேளாமல் பார்வையை அந்த ரதத்தின் மீது பதிய விட்டார்.

''இந்த ரதம் உனக்கு எப்படி கிடைத்தது?''

''கவி நாராயண பட்டர் எனக்கிட்ட பணியை நிறைவேற்ற பொறிகைக்குச் சென்று கொண்டிருந்தேன். வழியில் மேல மங்கலத்துக்கருகில் இதைக் கைப்பற்றினேன்'' என்றான் வாலிபன்.

அதற்கு மேல் பொறுக்காத ஜெயந்தன் இருவரையும் விலக்கிக் கொண்டு மழையில் நனைந்தபடி பாய்ந்து சென்றான். ரதத்தின் திரைச் சீலையை விலக்கிப் பார்த்தான். ஒரு கணம் திகைத்தவன், உடனே திரும்பி ''அமைச்சரே, இளவரசி இங்கு இருக்கிறார்!'' என்று கூவியவாறு சீலையை நன்றாக விலக்கி, உள்ளே மயங்கிக் கிடந்த அம்மங்கைதேவியை அமைச்சருக்கும் கோட்டைத் தலைவனுக்கும் காட்டினான்.

அமைச்சரது முகம் அம்மங்கையைக் கண்டதும் மலர்ந்தது. என்ன கூறுவது என்று தெரியாதவர் அந்த வாலிபனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு முதல் கடமை எது என்று உணர்ந்தவர் போல், பணிப் பெண்களை அழைத்து இளவரசியை உள்ளே கொண்டு செல்லப் பணித்தார். அவர்கள் சென்றதும் அந்த வாலிபனை நெருங்கினார்.

அவர் முகமும் குரலும் பெரும் கனிவைக் காட்டின.

''வீரனே, சோழ குலத்துக்கு ஓர் அவமானம் நேராமல் பெரும் தொண்டாற்றியிருக்கிறாய். யார் நீ?'' என்று வினவினார்.

''நான் கவி நாராயண பட்டரின் சீடன்.''

''உன் பெயர்?''

''அரையன் மதுராந்தகன்'' என்றான் அந்த வாலிபன்.

(தொடரும்)




A CLOCK STOPPED,

BUT TIME RUNS ON...

A tribute to the Father of our Nation in the February '93 issue of

# GOKULAM

*The monthly magazine for children*

96 PAGES FOR JUST Rs. 3!

GOKULAM
EKKADUTHANGAL MADRAS - 600 097

# “ரௌத்ரம்

**ராஜகுமாரன்**

“வேர்களைக் கிள்ளிவிட்டால்
விஷச் செடிகள் வளர்ந்து
விருட்சங்கள் ஆகும்
விபரீதம் நிகழாது!

அநீதிகளின் முகத்திரையை
அங்கேயே கிழித் தெறிந்தால்
உண்மைச் சுதந்திரம்
உதயமாகும்! இளையவனே!

புதிய ஆத்திச் சூடியைப்
புடம் போடு! அச்சந் தவிர்!
ஆண்மை தவறேல்!
ரௌத்ரம் பழகு!”

கரகோஷங்கள் அரங்கச் சுவர்களில் எதிரொலித்தன. கம்பீரமாக மேடையை விட்டு இறங்கி, பின்வரிசைக்குக் கீழிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான் முத்துக் குமரன்.

கவிதை வாசித்தபோது ஏற்பட்ட உணர்ச்சிக் கொந்தளிப்பு, முகத்தில் இன்னும் மிச்சமிருந்தது - செம்மையாய்!

பக்கத்து நாற்காலிப் பெரியவர், அவனை நீட்சண்யமாய்ப் பார்த்தார்.

கைக்குட்டை எடுத்து, முக வியர்வையை ஒத்தி எடுத்த போது, பெரியவர் சட்டென்று அவன் கைகளைப் பிடித்து அழுத்தமாய்க் குலுக்கினார்.

“கவிதை பிரமாதம் தம்பி! உன்ன மாதிரி எல்லா இளைஞர்களும் குரல் கொடுக்க ஆரம்பிச்சிட்டா இந்த தேசம் கொஞ்சம் கொஞ்சமா உருப்பட்டுடும்! நீ நல்லா வருவேப்பா!”

அரங்கேறிய சூட்டோடு கவிதைக்குக் கிடைத்த அங்கீகாரம். முத்து நெகிழ்ந்து போனான்!

“ரொம்ப நன்றி சார்!”

மேடையில் ஒருவர் ‘நன்றி நவின்று’ இலக்கிய விழாவை இனிதே முடித்தார்.

கூட்டம் கலைந்தது....

மேம்பாலம். ஏற்றமான சாலை. முத்துக்குமரன் சைக்கிள் மிதித்துக் கொண்டிருந்தான் - சிரமமாய்...

‘விட்டுப் போனவங்களுக்கெல்லாம் ரேஷன் கார்டு வந்துட்டுதுப்பா. நமக்கு மட்டுந்தான் இன்னும் வரல. ஏழு ரூபாய்க்குக் கடையில அரிசி வாங்கறது கஷ்டமா இருக்கு!’ - இரவு அம்மா சொன்ன வார்த்தைகள். லேசாய் நரம்புகள் சூடேறின. நாசி புடைத்தது.

அந்த தார்மீகக் கோபம் பாதங்களில் பாய... சைக்கிள் இன்னும் கொஞ்சம் வேகம் பிடித்தது.

கையில் பட்டம் வாங்கி மூன்று காலண்டர்கள் கிழிந்து விட்டன! ‘இந்து’வின் இரண்டாம் பக்கம் பார்த்துப் பார்த்து... அப்ளிகேஷன் போட்டுப் போட்டு -

ம்ஹூம்! எந்த வேலையும் கிடைத்த பாடில்லை.

அவன் தம்பி பாபு (‘எட்டாங்கிளாஸ்!’) இரண்டு வருடத்துக்கு முன் ‘ஆட்டோ மொபைல் வொர்க் ஷாப்’ ஒன்றில் ஹெல்ப்பர். இப்போது ஒரு மெக்கானிக்!

இன்று குடும்ப ஜீவனம் அவன் பாக்கெட்டை நம்பி!...

முத்துவும் வேலை கிடைக்கவில்லை என்று சும்மா சுற்றவில்லை. குறைந்த முதலீட்டில் தொடங்கிய ‘லெண்டிங் லைப்ரரி’ சின்ன வருமானம் தந்தது. அதுதான் குடும்பத்துக்கு அவன் பங்கு வருவாய்.

மெக்கானிக்காகப் பரிணாமம் அடைந்த பாபு, தினம் விதவிதமான ‘டூ வீலர்’களில் வீட்டுக்கு வரத் தொடங்கிய போதே அவனைப் பற்றிய கவலை தீர்ந்தது அம்மாவுக்கு!

வேலை கிடைக்காத முத்துவும், கடைக் குட்டி கௌரியும் தான் அம்மாவின் தற்போதைய தாய்மைக் கவலைகள்!

சைக்கிள் மேம்பால ஏற்றத்தை எட்டியது. முத்துவுக்கு மூச்சிரைத்தது... மீண்டும் சரிபாதி இறக்கம். இப்போது உந்துதலின்றியே சக்கரங்கள் லாவகமாக உருண்டன...

ஆகா! ஏற்றத்தைக் கஷ்டப்பட்டுக் கடந்து விட்டால்... இறக்கத்தில் காற்றைக் கிழித்து சைக்கிள் இறங்கும் போது உடம்பிலும் மனசிலும் எவ்வளவு ஆசுவாசம்!

ஒரு வேலை கிடைத்து விட்டால் - இத்தகைய ஆசுவாசம் ஆயுள் முழுமைக்கும்

கிடைக்கும் என்று ஏங்கினான் முத்துக் குமரன்!

**தா**லுக்கா அலுவலகம்.

புதிய கட்டமைப்பில், விஸ்தாரமான இரண்டு மாடிக் கட்டடம். உள்ளே போவதும் - வெளியேறுவதுமாக எக்கச் சக்க கூட்டம்.

சைக்கிளில் பூட்டில்லை. பாதுகாப்பாக ஓர் இடம் பார்த்து நிறுத்தினான். கேரியரில் இருந்த மனுவை எடுத்துக் கொண்டு மாடிப் படிகளில் ஏறும்போது - போன தடவை சப்-தாசில்தாரோடு பேசியது ஞாபகம் வந்தது....

'எங்க ஊர்ல எல்லா வீட்டுக்கும் ரேஷன் கார்டு வந்துட்டுது சார். எனக்கு மட்டும் இன்னும் கெடைக்கல!'



'மனு எழுதிக் குடுத்திட்டுப் போ. ரெண்டு மாசம் கழிச்சி வந்து பாரு....'

'சார்! ப்ளீஸ்... கொஞ்சம் சீக்கிரம் கார்டு கெடைக்க....' -

''யோவ்! அதான் சொல்றேன்ல. விட்டுப் போனவங்க லிஸ்ட் ரெடி பண்ணணும். உன் அவசரத்துக்கெல்லாம் ஒண்ணும் வேலை ஆகாது!' - சர்வ அலட்சியமான பதில்!

உள்ளுக்குள் ஒரு 'கோப வெடிகுண்டு' வெடிக்கத் தயாரானது. சரி! இரண்டாவது தடவைதானே.. பொறுமையாக வந்து விட்டான்.

இது மூன்றாவது முறை!

ரேஷன் கார்டோ - குறைந்த பட்சம் ஒரு பொறுப்பான பதிலோ கிடைக்கவில்லை என்றால், அந்த 'கோப வெடிகுண்டு'க்கு நெருப்பு வைத்து விடுவது!

உறுதியாகத் தீர்மானித்தான். வேறெப்போது ரௌத்ரம் பழகுவது?

முத்து, சப்-தாசில்தார் அறையை நெருங்கினான்.

வாசலில் நீண்ட க்யூ. கையில்

# பழகு!''

மனுக்களும், முகத்தில் கவலைகளுமாக நிறைய ஜனங்கள்! பாவம்! யாராருக்கு என்னென்ன பிரச்னைகளோ?

க்யூவின் முற்றுப் புள்ளியாகி.... உள்ளே போனதும் பேச வேண்டியதை ஒத்திகை பார்த்த போது - ஒரு கை அவன் தோளில் விழுந்தது -

மூர்த்தி நின்றிருந்தார்.

''வாங்க வி.ஏ.ஓ. சார்... பாருங்க, ரேஷன் கார்டுக்கு எத்தனை மாசமா அலையறேன்!''

'உஸ்' என்று எச்சரிக்கும் பாவனையோடு அருகில் வந்தார் மூர்த்தி.

''முத்து! உள்ள இருக்கிறவரு புதுசு. முன்ன இருந்தவர விட ரொம்ப கடுப்பெடுத்த 'பார்ட்டி'! வார்த்தையக் கொட்டிடாதே. பணிவாப் பேசு. உன் நல்லதுக்

குத்தான் சொல்றேன். இது மேடை இல்ல!'' - காதைக் கடித்து விட்டு அவசரமாக நகர்ந்தார்.

முத்து உள்ளே சென்றான்.

பவ்யமாக ''வணக்கம் சார்!'' என்றான்.

விச்சரிவான் மீசை, கனத்த சரீரம், உடலுக்குப் பொருந்தாத சபாரி சகிதமான புது சப்-தாசில்தார், ''ம்! என்ன விஷயம்?'' என்றார்.

கேள்வியிலும் - பார்வையிலும் அலட்சியம் குஷன் நாற்காலி போட்டு உட்கார்ந்திருந்தது!

அவரிடம் மனுவைக் கொடுத்து, ரேஷன் கார்டின்றிக் குடும்பம் படும் கஷ்டங்களை, அதற்காக அலைந்த அலைச்சல்களைப் பணிவாக எடுத்துக் கூறினான்.

''சரிய்யா. அதுக்கு நாங்க என்ன பண்ண முடியும்? நீ ஒரு ஆளா இப்படி வந்திருக்கே? இன்னைக்கு அறுபது பேர் உன் கேசுதான்! இந்த மாசம் கலெக்டர் டூர் இருக்கு. அதுக்கப்புறந்தான் விட்டுப் போன வங்க லிஸ்ட் ரெடியாகும். மனுவை வெளியில குடுத்துட்டுப்போ. ரெண்டு மாசம் கழிச்சி வந்துபாரு!'' அடுத்த ஆளுக்காக வாசல் பக்கம் கண்களைத் திருப்பினார் - இயந்திரத் தனமாக!

அட! இன்னும் இரண்டு மாசமா? அறுபது குடும்பங்களின் வயிற்றுப் பிரச்னையில் இவ்வளவு அலட்சியமா? இதை விடக் கூடாது!

'ஏன்யா நீ ஒரு பொறுப்பான அதிகாரியா? கொஞ்சங்கூட மரியாதை தெரியலியே! நாங்க மனுஷங்கதான்யா... ஆடு மாடு இல்ல! ஜனங்கள அன்பா அணுகணும். ஃபர்ஸ்ட் யூ லேர்ன் இட்!' என்று முத்துக்குமரன் பேசவில்லை - வாய்வரை வார்த்தைகளை ஆவேசமாய் அச்சுக் கோத்ததோடு சரி!

பல்லைக் கடித்தான்.

'தம்பி! கோவத்துல ஏதாச்சும் பேசிடாதப்பா. கார்டே கெடைக்காம பண்ணிடப் போறாங்க!' - அம்மா. அதைத் தொடர்ந்து வி.ஏ.ஓ விடுத்த எச்சரிக்கை!

முத்து சாந்தமானான்!

''தேங்யூ சார்!'' செயற்கையான வார்த்தைகளை உதிர்த்து விட்டு வெளியே வந்து, கிளார்க்கிடம் மனுவைக் கொடுத்தான்.

''சார்! சீக்கிரம் கார்டு கெடைச்சா நல்லாருக்கும். கொஞ்சம் கவனிங்க ப்ளீஸ்!''

கிளார்க் பெரிதாகச் சிரித்தார்! ''என்ன சார்! உங்களைக் கவனிக்கத்தானே நாங்க இருக்கோம். நம்பள கொஞ்சம் கவனிச்சிட்டுப் போங்க. ஒரு வாரத்துக்குள்ள கார்டு வீடு தேடி வந்துடும்!''

அவனுக்குள் மீண்டும் கோப வெடி குண்டு 'என்னைப் பற்றவை' என்றது. அம்மாவின் முகம் வந்து 'வேண்டாம்' என்றது!

மறுபடியும் அமைதியாகி ஜிப்பாவின் பைக்குள் கையை விட்டான். ஒரு வெளிர் ஆரஞ்சு நிற கவர் வந்தது. அதன் மேல் அழகான எழுத்துக்களில் 'கவிஞர் திரு. முத்துக்குமரன்..'....

கவியரங்கத்தில் 'ரௌத்ரம் பழகு' என்ற தலைப்பில் அநீதிகளை, லஞ்ச ஊழல்களைச் சாடி அவன் பாடிய கவிதைக்குக் கிடைத்த சன்மானம்!

கிளார்க்கிடம் பணத்தைக் கொடுத்து விட்டு, மௌனமாக அலுவலகத்தை விட்டு வெளியேறியபோது -

காலையில் வாசித்த கவிதை வரிகள் முத்துக் குமரனின் காதில் ஒலித்தன....

''இளையவனே!
புதிய ஆத்திச் சூடியைப்
புடம் போடு!
அச்சந்தவிர்!
ஆண்மை தவறேல்!
ரௌத்ரம் பழகு!....''

## முதல் அறிவொளி இயக்கம்!



இந்தியாவின் முதல் அறிவொளி இயக்கம் அறுபது ஆண்டுகளுக்கு முன்பு மணிப்பாலில்தான் துவங்கியது. அறியாமையிலும் வறுமையிலும் மூழ்கியிருந்த அக் குக் கிராமத்தில் சீமை ஓடுகள் தயாரிக்கும் ஒரு சிறிய தொழிற் சாலையை நிறுவிய தொழிலதிபர் டி.எம்.ஏ. பாய், தொழிலாளர்கள் தாய்மொழி எழுத்துக்களைப் பயின்று, கையெழுத்துப் போடக் கற்றுக் கொண்டால் அன்றாடம் ஓரணா அதிக ஊதியம் தரப்படும் என அறிவித்தார். விரைவில் கிராமம் முழுவதும் கல்வி அறிவு பரவியதைக் கண்டு மனமகிழ்ந்தார். இன்று மணிப்பால் சர்வதேசப் புகழ் பெற்ற பல கல்வி ஸ்தாபனங்கள் இயங்கும் கேந்திரமாக விளங்குகிறது.

- அ. ஷண்முகசுந்தரம்.

# 19. கூனியின் போதனை

அது வரையில் ராமனைத் தன் வயிற்றில் பிறந்த குழந்தையாகவே பாவித்து வந்த கைகேயி, இப்போது மந்தரையின் உபதேச வலையில் சிக்கிக் கெட்டுப் போனாள்.

''பயமாக இருக்கிறது. என்ன செய்யலாம் சொல், மந்தரா! கௌசல்யைக்கு அடங்கி நான் அவள் வேலைக்காரியாகப் போவதா? ஒரு நாளும் முடியாது. பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தே தீர வேண்டும். நீ சொல்லுவதே சரி. ராமனை வனத்துக்கு அனுப்பிவிட வேண்டும் என்பது நிச்சயம். இதற்கு என்ன உபாயம் செய்யலாம்? சொல், நீதான் சாமர்த்தியசாலி'' என்று மந்தரையைச் சரணமடைந்தாள். அந்தச் சமயம் கைகேயியின் கண்களுக்கு மந்தரையின் கூன் வடிவம் கூட மிகச் சௌந்தரியமாகக் காணப்பட்டது. இது வெறும் ஹாஸ்யம் அல்ல, சூட்சமமான மனோதரும ரகசியம்.

''கைகேயி! இது என்ன விந்தை? உபாயம் என்னையா கேட்கிறாய்? உனக்கு ஏன் இவ்வளவு மறதி வந்து மூடிக் கொண்டது? அல்லது வேஷம் போடுகிறாயா? நானே சொல்ல வேண்டுமென்றால் சொல்லுகிறேன், கேள்'' என்றாள் மந்தரை.

இதைச் சொல்லி விட்டுக் கொஞ்சம் நிறுத்தினாள்.

''சொல், சொல், எப்படியாவது பரதனுக்குப் பட்டம் சூட்ட வேண்டும், ராமனுக்கு அபிஷேகம் நடக்காமல் செய்ய வேண்டும்'' என்றாள் கைகேயி, பரபரப்பாக.

''சொல்லுகிறேன், அவசரப்படாதே. முன்னொரு காலத்தில் உன் புருஷன் தசரத சக்கரவர்த்தி தெற்கே சம்பரனோடு யுத்தம் செய்தது நினைவு இருக்கிறதா? நீயும் கூட இருந்தாயே? இந்திரனுக்கு உதவியாகப் போனான் அல்லவா உன் புருஷன்? வைஜயந்தி நகரத்துச் சம்பரனை இந்திரன் சமாளிக்க முடியாமல் தசரதனுடைய உதவியை நாடினான். தசரதன் சென்று சண்டையிட்டு உடம்பெல்லாம் காயப்பட்டு நினைவிழந்து போனான் அல்லவா? அப்போது அவனுடைய தேரை நீயே நடத்திச் சாமர்த்தியமாக யுத்தகளத்திலிருந்து வெளியே கொண்டு போய், அரசன் உடலில் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் மெதுவாக எடுத்து நினைவு தெளியச் செய்து அவன் உயிரைக் காப்பாற்றினாய், மறந்து விட்டாயா?

அப்போது அவன் உனக்கு என்ன சொன்னான்? ''இரண்டு வரங்களைக் கேள்; எதைக் கேட்டாலும் நான் தருவேன்' என்று அவன் சொல்ல, 'எனக்கு வேண்டும்போது கேட்கிறேன். இப்போது வேண்டாம்' என்று நீ சொல்ல, 'அப்படியே' என்று அவன் கூறினான் அல்லவா? நீயே எனக்கு இதைச் சொல்லியிருக்கிறாய். நீ மறந்து விட்டாய். நான் மறக்கவில்லை. அதை வைத்து இப்போது காரியத்தைச் சாதிக்கலாம். ராம பட்டாபிஷேகத்தை நிறுத்தி பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய் என்று உன் புருஷனைக் கேள். இரண்டு வரத்தில் முதலாவதாக அதைக் கேள். இரண்டாவதாக ராமனைப் பதினான்கு வருஷம் காட்டுக்கு அனுப்பிவிட வேண்டும் என்று கேள். பாபம் என்று தயங்காதே! பயப்பட்டு நடுங்காதே! நான் சொல்வதைக் கேள். அப்படி ராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டால்தான், ஜனங்கள் அவனிடம் வைத்திருக்கும் அபார அன்பும் பற்றும் நாளா வட்டத்தில் மறைந்து போய், உன் குமாரனுடைய யுவராஜ பட்டம் ஊர்ஜிதப்படும். போய், கோபாக்கிரஹத்தில் தரையில் படுத்துக் கொள். பழைய துணி உடுத்திக் கொண்டு தரையில் கிட! அரசன் வந்த போது பேச வேண்டாம். கண்ணெடுத்தும் பார்க்க வேண்டாம். உன் துயரத்தை அவன்

ராஜாஜி

சிக்கமாட்டான் என்பது எனக்குத் தெரியும். நம்முடைய காரியம் வெற்றியுடன் முடியும்'' என்றாள் மந்தரை.

''அரசன் என்ன வெல்லாமோ ஆசை காட்டுவான். அதற்கு உட்படாதே! கேட்ட இரண்டு வரமே வேண்டும் என்று பிடிவாதமாக இரு. சத்தியத்துக்குப் பயந்த அரசன் கட்டாயம் வழிக்கு வருவான். உன்னிடம் அவன் வைத்திருக்கும் காதலின் வேகம் எனக்குத் தெரியும். உனக்காக உயிரைக் கொடுக்க வேண்டுமானாலும் கொடுப்பான். நெருப்பில் விழச் சொன்னாலும் விழுவான். நான் சொன்னபடி செய், பயப்பட வேண்டாம். ராமனை வனத்துக்கு அனுப்பினாலொழிய உன் காரியம் சாதகமாகாது. ராமன் வெளியேற்றப்பட வேண்டும். அப்போது தான் பரதனுக்கு நீ சம்பாதித்துத் தரும் பதவி ஸ்திரமாகும். இல்லாமற் போனால் பெற்ற பதவி கனவாக மறைந்து போகும். இதை நினைவில் வைத்துக் கொள். இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்காதே! ஜாக்கிரதை!'' என்றாள் மறுபடியும்.

கூனியின் இந்த உபதேசத்தைப் பெற்றதும் முதலில் பயத்தில் மூழ்கிய கைகேயியின் முகம் பிறகு மலர்ந்தது. ''உன் புத்தி கூர்மையை நான் என்னவென்று சொல்லுவேன், மந்தரா! என்னைக் காப்பாற்றினாய்!'' என்று சொல்லிக் குதிரைக் குட்டியைப் போலத் துள்ளிக் குதித்தாள்.

''தாமதம் செய்யாதே, செய்ய வேண்டியதை உடனே செய். கரை உடைந்து போன பிறகு ஏரிக்கு அணை கட்ட முடியாது. சொன்னதையெல்லாம் கவனத்தில் வை. பிடிவாதமாக இருக்க வேண்டும். நிச்சயமாக உன் காரியம் சித்தியாகும்'' என்று ராமனை வனத்துக்கு அனுப்புவதைப் பற்றி மறுபடியும் வற்புறுத்திச் சொன்னாள்.

கைகேயி ''சந்தேகப் படாதே. நான் உறுதியாக இருப்பேன். இதோ, பார்!'' என்று அப்போதே கோபாக்கிரஹத்துக்குள் நுழைந்து தன் ஆபரணங்களையெல்லாம் சிதறியிறைத்து விட்டு, துணியை மாற்றிக் கொண்டு தரையில் படுத்துக் கொண்டாள். படுத்தவள் அழுத குரலில் மந்தரைக்குச் சொன்னாள். ''மந்தரா! என் தந்தை கேகயராஜவிடம் நீயே போய்ச் சொல்லுவாய். பரதனுக்குப் பட்டாபிஷேகம் என்றோ, அல்லது கைகேயி இறந்தாள் என்றோ, இரண்டில் ஒன்று நீயே போய்ச் செய்தி சொல்லி விடு, என் மந்தரையே!'' இவ்வாறு சொல்லி உண்மையிலேயே தசரதன் செய்ததெல்லாம் மோசம் என்று எண்ணி அவன் மேல் கடுங்கோபத்தோடு தரையில் படுத்தாள்.

அப்போதும் அவள் அழகு குறையவில்லை. சிரித்தாலும் அழகு, கோபித்தால் அதுவும் ஒரு அழகு அல்லவா அழகைப் பெற்ற பெண்ணின் முகம்?

**பா**ப எண்ணம் நன்றாகப் புகுந்து விட்டது. கைகேயினுடைய சுபாவம் முற்றிலும் மாறிப் போயிற்று. தன்னுடைய வாழ்க்கை அடிமை வாழ்க்கையாகப் போகும், பரதன் உயிருக்குப் பெரிய ஆபத்து அருகில் வந்து விட்டது என்கிற திகில் பிசாசு போல் அவள் உயிரைப் பிடித்துக் கொண்டு விட்டது. இதுவரையில் என்றும் செய்யாத வேலை. புருஷனை ஒரு பெரிய விஷயத்தில் நிர்ப்பந்திப்பதில்



ஏற்படக் கூடிய கூச்சமும், ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று கேட்கப் புகுவதில் உண்டாகும் வெட்கமும், பாப பயமும் அனைத்தையும் உடனே மனத்தில் வெள்ளோட்டம் நடத்தி விட்டாள். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு விட்டாள்.

மிகப் பெரிய துக்கம் மேலிட்டவளாக உயிர்த்தும், வியர்த்தும், கண்களை மூடியும் நாக கன்னிகையின் அழகைப் பெற்ற கைகேயி கூந்தலை விரித்துத் தூசி படிந்த தரையில் கிடந்தாள். ஒரு அழகிய பறவை வேடனுடைய அம்பால் தாக்கப்பட்டுக் கீழே திடீரென்று விழுந்ததுபோல் தரையில் கிடந்தாள். அவளுடைய உடலை அலங்கரித்த புஷ்பங்களும் சகல திவ்விய ஆபரணங்களும் இங்கு மங்கும் கருத்த ஆகாயத்தில் நட்சத்திரங்களைப் போல் பிரகாசித்துக் கொண்டு ஊடல் அறையில் சிதறிக் கிடந்தன.

# 20. சத்தியம் தவறாதீர்!

சபையில் காரியங்களையெல்லாம் முடித்து விட்டு, பட்டாபிஷேக மகோற்சவத்துக்காகச் செய்ய வேண்டியதையெல்லாம் பூர்த்தியாக உத்தரவிட்டு, ஒரு கவலையும் இனி இல்லை என்று சந்தோஷ மடைந்து தசரதன் தன் காதல் மனைவி கைகேயி தேவியினுடைய அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். அரசியல் காரியங்களில் கிரமப்படி கேட்க வேண்டியவர்களையெல்லாம் கேட்டுச் சம்மதம் பெற்றுப் பட்டாபிஷேகத் தீர்மானம் முடிந்து விட்டது. ஒரு பெரிய பாரம் தீர்ந்து கவலையற்று ஒய்வு ஏற்பட்டால் உடலின் பசு தர்மம் தலை எடுப்பது இயற்கை. உடனே போய்த் தன் அழகிய காதல் மனைவியோடு விஷயங்களைச் சொல்லிச் சல்லாப சுகம் அடையலாம், பொழுது விடிந்ததும் உற்சவம், அதுவரையில் ஆசை தீரப் போகத்தில் மூழ்கலாம் என்கிற எண்ணத்தோடு வெள்ளை மனத்துத் தசரதன் அந்தப்புரத்தில் புகுந்தான்.

எப்போதுமே இளைய மனைவியின் அரண்மனை விசேஷமான அழகு வாய்ந்தது. ரமணீயமான தோட்டமும் வாவிகளும் மேலே பறக்கும் பறவைகளும் நீரில் விளையாடும் பறவைகளும் சித்திரத் தோகைகளை விரித்தாடும் மயில்களும் மரங்களிலெல்லாம் விதம் விதமான புஷ்பங்கள் மலர்ந்து பிரகாசிக்கும் காட்சியுமாக அந்த அந்தப்புரம் எப்போதையும் விட அன்று அதிக அழகு பெற்று விளங்குவதாக எண்ணினான் தசரதன். ஆகாயத்தில் ராகுக் கிரகம் விழுங்கக் காத்துக் கொண்டிருக்கிற நாளில் அதை யறியாத சந்திரன் பயமின்றிப் பூரண களையுடன் உதயமாவது போல் முகத்தில் மகிழ்ச்சி ஜொலிக்கத் தசரதன் கைகேயியின் அழகிய இல்லத்தில் பிரவேசித்தான். அங்கே என்ன காத்திருக்கிறது என்று அவன் அறியவில்லை!

அரண்மனையில் வாசனைத் திரவியங்கள், பான விசேஷங்கள் வழக்கம் போல் எல்லாம் அந்த அந்த இடத்தில் வைக்கப்பட்டிருந்தன. அவனுடைய பிரகிருதி வேகம் அதிகரித்தது. ஆசனங்களையெல்லாம் பார்த்தான். அவளுடைய காதலியைக் காணவில்லை.

இன்பத்துக்கென்றே தனியாக அமைக்கப் பெற்ற மனைவியாவாள் கைகேயி. அவள் ராஜ விவகார விஷயங்கள் எதிலும் தலையிடுவதில்லை. அவளுடைய அந்தப்புரம் நுழைந்ததுமே அரசனுக்கு உள்ளம் முழுதும் காதல் வேகம் பொங்கும். எப்போதும் அரசன் வரும் சமயம் அவள் காத்திருந்து எதிர்கொண்டு அணைத்துக் கொள்ளுவாள். இன்று ஏன் அவள் காணப்படவில்லை? அரசன் கொஞ்சம் திகைத்தான். படுக்கைகள் ஆசனங்கள் எல்லாம் மறுபடி உற்றுப் பார்த்தான். விளையாட்டுக்காக ஒளிந்து கொண்டிருக்கிறாளோ என்று எண்ணி மகிழ்ச்சியடைந்து திரும்பத் திரும்பக் கவனித்துப் பார்த்தான். என்றும் இப்படி இருந்தது இல்லையே, என்ன காரணம் என்று யோசித்து அங்கிருந்த ஒரு காவல் பெண்ணைக் கேட்டான். அவள் கை கூப்பி ''சுவாமி தேவியார் மிகக் கோபங் கொண்டு உள்ளே போய் விட்டார்கள்'' என்றாள்.

அரசன் பயந்தான். உள்ளே சென்று ஊடலறைக்குள் நுழைந்தான். கொஞ்சமும் எதிர்பாராத விபரீதக் காட்சியைக்

கண்டான்.

கைகேயி அரசனைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. அப்பாவி அரசனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. எவ்வாறு விளங்கும்? கல்மஷம் என்பது கொஞ்சமும் அவன் உள்ளத்திலில்லை. கைகேயினுடைய உள்ளத்திலோ பாபம் நிறைந்து அடைந்துக் கொண்டிருந்தது. இவன் வயதோ அதிகம். அவளோ இன்னும் சிறு வயது. காதல் உணர்ச்சியோ அரசனுக்கு அதிக வேகத்திலிருந்தது. இந்த நிலையில் அவனுக்கு ஒன்றும் விளங்காமல் பைத்தியக்காரனைப் போல் நடந்து கொண்டான்.

"என் கதையெல்லாம் பிரசுரமாகாமல் திரும்பி வர்றதைப் பத்திக் கூட நான் கவலைப்படலே!"

"ஊம்! பின்னே?"

"இப்படி நான் எழுதின வாசகர் கடிதத்தைக் கூட திருப்பியனுப்பியிருக்காங்களே.... அதை நினைச்சாத்தான் வயிறு எரியுது!"

- எஸ். ரமேஷ்



கீழே கிடந்த அவளருகில் இவனும் தரையில் உட்கார்ந்து அவள் தலையை மெதுவாகத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தான்.

''உனக்கென்ன வாயிற்று? உடம்பில் என்ன? எங்கேயாவது வலியா? எனக்கு சேவை செய்யச் சிறந்த வைத்தியர்கள் இல்லையா? உடனே வரவழைக்கிறேன். எதுவாயிருந்தாலும் சரிப்படுத்தி விடுவார்கள். நீ பயப்பட வேண்டாம்'' என்றான்.

கைகேயி பெருமூச்சு விட்டாள்; பேசவில்லை.

''உன்னை யாராவது அரண்மனையில் அவமதித்துப் பேசி விட்டார்களா? யாராவது ஏதாவது தவறு செய்திருந்தால் எனக்குச் சொல், கடுந்தண்டனை விதித்து விடுவேன். யாராவது உன்னை அலட்சியம் செய்து உனக்குக் கோபம் உண்டாக்கினார்களா? அல்லது உனக்கு ஏதாவது வேண்டுமாயிருந்து என்னையறியாமல் அதை நான் கவனிக்காமல் விட்டு விட்டேனா, சொல்!''

இவ்வாறெல்லாம் சாதாரணமாகப் பெரிய வீட்டு நிருவாகத்தில் ஏற்படக் கூடிய குறைகளை எல்லாம் கேட்டுப் பார்த்தான்.

கைகேயியோ இதையெல்லாம் ஒன்றும் கவனிக்காமல் பிசாசு பிடித்தவள் போல் பேசாமல் கிடந்தாள்.

''உனக்கு என்ன வேண்டுமானாலும் கேள். யாரைத் தண்டிக்க வேண்டும்? தண்டிப்பேன். யாரைத் தண்டனையிலிருந்து விடுவிக்க வேண்டும்? உடனே கொலையாளியாக இருந்தாலும் விட்டு விடுவேன்! - '' இப்படியெல்லாம் காம மோகத்தால் பீடிக்கப்பட்டு, கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

''எனக்கு உள்ள சர்வாதிகாரம் உனக்குத் தெரியாதா? யாருக்கு என்ன கொடுக்க வேண்டும்? எந்த தேசத்தில் யாரை என்ன செய்ய வேண்டும்? சொல், அதை உடனே செய்து விடுவேன்'' என்றான் மறுபடியும்.

கைகேயி எழுந்து உட்கார்ந்தாள். அரசனுக்கு உடனே சந்தோஷமாகி விட்டது. கைகேயி பேச ஆரம்பித்தாள்.

''என்னை யாரும் அலட்சியமாகப் பேசவில்லை, யாரும் நிந்திக்கவில்லை, யாரும் அவமானப் படுத்தினதில்லை. அரசனே, உம்மால் ஆகவேண்டிய காரியம் இருக்கிறது. அதை நீர் செய்து தர வேண்டும். செய்து தருகிறேன் என்று நீர் சத்தியவாக்குத் தரவேண்டும். தந்தால் சொல்லுகிறேன்'' என்றாள்.

இதைக் கேட்டதும் அப்பாவியான தசரதனுக்கு மனம் பூரித்து விட்டது. எது வேண்டினும் அதைச் செய்யும் சக்தி எனக்கிருக்க, இனி என்ன கவலை என்று தைரியம் அடைந்தான். முகம் மலர்ந்து, ''கைகேயி! உடனே சொல், உனக்கு என்ன வேண்டும்? அதைச் செய்கிறேன். எதன் மேல் ஆணையிட்டுச் சொல்ல வேண்டும்? எனக்கு மிகப் பிரியமானது எது? பெண்களுக்குள் நீதான் என் அன்பின் உச்சிக்கோடு. ஆண்களுக்குள் ராமசந்திரனை விட எனக்கு வேறு யாரும் பிரியமில்லை. அந்த ராமன் பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். நீ எது வேண்டுமென்

கிறாயோ அதைச் செய்வேன். இது உறுதி'' என்றான்.

பாபம் முற்றிக் கொண்டு வந்தது. ''ராமன் மேல் ஆணை'' என்றதுமே கைகேயிக்குத் தைரியம் பிறந்தது.

''அப்படியா? ஆனால் சரி, ராமன் மேல் ஆணையிட்டுச் சொல்வீர். நான் கேட்பதை மறுக்காமல் தருவதாக மறுபடியும் சபதம் செய்வீராக'' என்றாள்.

''என் காதல் அரசி! அப்படியே! இதோ சபதம் செய்கிறேன். என் அன்புக்குரிய ராமன் மேல் ஆணை. நான் அடைந்த சகல புண்ணியத்தின் மேலும் ஆணை; நீ என்ன விரும்புகிறாயோ, அதைச் செய்வேன், இது சத்தியம்'' என்றான் அரசன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் கைகேயிக்குத் தன் மகா பாப எண்ணத்தைக் கருதி ஓரளவு சந்தேகம் உண்டாயிற்று. ஒரு வேளை 'மாட்டேன், இது மகா பாபம், ஆணையும் சபதமும் இத்தனை பெரிய பாபம் செய்யும்படி இடம் தராது' என்று சொல்லி விடுவானோ என்று பயம் ஏற்பட்டது. எழுந்து நின்று கைகள் கூப்பி நான்கு திசைகளும் பார்த்து உரத்த குரலில், ''ஓ தேவர்களே! என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லாரும் சாக்ஷியாவீர்கள். ஏ! சூரிய சந்திராதி கிரகங்களே, நீங்களும், சாக்ஷி, ஏ! பஞ்ச பூதங்களே, நீங்களும் சாக்ஷி. சத்யம் தவறாத என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லாரும் சாக்ஷியாவீர்கள்!'' என்று சொன்னாள்.

மகிழ்ச்சி மலர்ந்த முகத்தோடு தசரதன் கண் கொட்டாமல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். காம மோகத்தால் அரசன் மதியிழந்து வலையில் சிக்கினான் என்று நிச்சயம் செய்து கொண்டாள். அதன் மேல் தைரியமாக ஆரம்பித்தாள்:

''அரசனே, நினைவிலிருக்கிறதா? முன் நாளில் யுத்த பூமியில் காயப்பட்டு உயிரிழக்கும் தறுவாயில் நீர் இருந்த போது இருட்டில் ரதத்தை நானே மெள்ளச் செலுத்தி, அப்புறப்படுத்தி, உம்முடைய உடலில் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் எடுத்துச் சுகப்படுத்தினேன். மூர்ச்சை தெளிந்ததும், 'பகைவர்கள் என்னைக் கொன்றிருப்பார்கள்; நீ எனக்கு உயிர் கொடுத்தாய். உனக்கு வேண்டிய வரங்கள் இரண்டு கேள்' என்றீர். நான் 'இப்போது வேண்டாம், பிறகு வேண்டும் போது கேட்கிறேன். இப்போது நீர் உயிர் தப்பியதே எனக்குப் பெரு மகிழ்ச்சி' என்று சொன்னேன் அல்லவா? நினைவிலிருக்கிறதா?'' என்றாள்.

''நன்றாக நினைவிலிருக்கிறது! இரண்டு வரங்களையும் கேள். இப்போதே தருகிறேன்'' என்றான் தசரதன்.

''சபதம் செய்திருக்கிறீர். ராமன் மேல் ஆணையிட்டுச் சபதம் செய்திருக்கிறீர். தேவர்களும் பஞ்ச பூதங்களும் சாக்ஷியாக இருக்கிறார்கள். இதோ கேட்கிறேன். சத்தியத்தைக் காப்பாற்றுவீர். உம்முடைய முன்னோர்கள் வழியில் நின்று நல்ல கதியடைவீர். வாக்குத் தவறாதீர். இப்போது அமைத்து வைத்திருக்கும் பட்டாபிஷேக சாமக்கிரியைகளைக் கொண்டு பரதனுக்குப் பட்டங் கட்டுவீராக. முதல் வரமாக இதை வேண்டுகிறேன். இரண்டாவது வரம் நான் கேட்பது, உம்முடைய மகன் ராமனைப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்யும்படி உடனே தண்டகாரண்யம் அனுப்புவீர். செய்த பிரதிக்ஞையைப் புறக்கணிக்காதீர். உம்முடைய குலத்தின் புகழையும் புண்ணியத்தையும் காப்பாற்றுவீர்!'' என்றாள்.

(தொடரும்)

அடுத்த இதழில்....

# நடனமாடும் நீரூற்று!

—வியக்க வைக்கும் கட்டுரை



# காந்தி தேசம்

அந்தச் சின்ன அறையில் அமர்ந்திருந்த அனைவரும் அறுபது வயதைத் தாண்டியவர்கள். தும்பைப் பூ வெள்ளையில் வேஷ்டி சட்டை அணிந்திருந்தார்கள். தோளில் துண்டு போட்டிருந்தார்கள். தலையில் காந்தி குல்லாய் வைத்திருந்தார்கள். மாதத்திற்கு ஒரு முறை மாவட்டத்தில் உள்ள சுதந்திரப் போராட்ட தியாகிகள் அனைவரும் கூடி, நாட்டைப் பற்றி, நிகழ் கால அரசியலைப் பற்றிப் பேசுவது வழக்கம்.

தியாகிகள் சங்கத் தலைவரான மாரிமுத்து உட்கார்ந்து கொண்டே பேசினார். பொதுவாகப் பேசிவிட்டுச் சொன்னார் :

''போன கூட்டத்திலேயே உங்ககிட்ட பேசணும்னு இருந்தேன்... ஏனோ முடியல... நம்ம ஊர்ல எல்லாத் தலைவர்கள் சிலையும் இருக்கு. ஆனா நம்ம மகாத்மா சிலை மட்டும் இல்ல... ஊர்ல முக்கியமான எடத்துல மகாத்மா சிலைய வைக்கணும்னு நான் விரும்பறேன்.. நீங்க என்ன நினைக்கிறீங்க...?''

''வைக்கணும்... அவசியம் வைக்கணும்!'' என்றார்கள் அனைவரும்.

''வெண்கலத்துல காந்தி சிலை செய்யணும்னா கிட்டத்தட்ட பத்தாயிரம் செலவாகும். வசூல் பண்ணிடலாம். காந்தி சிலை வைக்கணும்னா நிதி தாராளமாக் கிடைக்கும். நாம எல்லாரும் சேர்ந்து போனா சீக்கிரமே வசூல் பண்ணிடலாம்.''

''நாளைக்கே ஆரம்பிச்சிடலாம்... சிலைய எந்த எடத்துல வைக்கிறது?'' கூட்டத்திலிருந்து ஒரு தியாகி கேட்டார்.

''பஸ் ஸ்டாண்ட் பக்கத்துல மூணு ரோடு சந்திக்கிற எடத்துல வைக்கலாம். முனிசிபாலிடி கமிஷனர பார்த்துப் பேசணும்.... அத பார்த்துக்கலாம். காந்தி சிலை வைக்கணும்னா பர்மிஷன் கிடைச்சிரும். நாளைக்குக் காலைல பத்து மணிக்கு எல்லாரும் இங்க வந்துடுங்க....''

மாரிமுத்து பேச்சை முடிக்க, அனைவரும் எழுந்தார்கள்.

வெள்ளைவெளேரென்று வேஷ்டி, சட்டையுடன் தலையில் குல்லாவுடன் கும்பலாகச் சென்ற தியாகிகளை கடைத் தெரு ஆச்சரியமாக வேடிக்கை பார்த்தது.

எழுந்து நின்று வணங்கிப் பணத்தை அள்ளிக் கொடுத்தவர்களும் உண்டு. கல்லாவில் இருந்து எழுந்து சென்று அடுத்த கடையில் நின்று கொண்டு தியாகிகள் முதுகை பார்த்துச் சிரித்தவர்களும் உண்டு. என்றாலும் மாரிமுத்து எதிர்பார்த்ததை விட விரைவாக நிதி சேர்ந்தது. பத்தாயிரம் ரூபாய் மூன்றே தினங்களில் வசூல் ஆனது.

மாரிமுத்து சந்தோஷமானார். அவர் நீண்ட நாட்களாக நினைத்திருந்த காரியம் முடியப் போவதில் ஏகப்பட்ட மகிழ்ச்சி அவருக்கு.

சிலை அமைப்பது தொடர்பாக நான்கு பேர் கொண்ட கமிட்டி அமைக்கப்பட்டது.



திருவாரூர் பாபா

அடுத்த நாளே கும்பகோணம் சென்றார்கள். சிரித்த முகத்துடன் கூடிய அழகான மார்பளவு காந்தி சிலைக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு வந்தார்கள்.

''வணக்கம் ஸார்.''

நகராட்சி ஆணையர் நிமிர்ந்தார். நான்கு பேரையும் பார்த்தார். பொதுவாக ''உட்காருங்க'' என்றார்.

உட்கார்ந்தார்கள்.

''என்ன விஷயம்?'' என்றார்.

''காந்தி சிலை வைக்கிறது சம்பந்தமா மனு கொடுத்திருந்தோம்.''

''ஆமாம் பார்த்தேன். சிலை எந்த எடத்துல வைக்கப்போறீங்க...?''

''பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்துல... போலீஸ் போஸ்ட் இருக்குல்ல... அதுக்குப் பக்கத்துல.''

''அடடா.... அந்த எடம் முனிசிபாலிடிக்குச் சொந்தமானது இல்லியே... ஹைவேஸ் எடமுல்ல அது....''

''அப்படியா... நீங்க பர்மிஷன் தர முடியாதா...?''

''முடியாதே... ஹைவேஸ் டிபார்ட்மெண்டுக்கு எழுதுங்க... அந்த எடத்துல தான் வைக்கணுமா... அதுக்கு எதிர்த்தாப்ல பெரிய இடம் இருக்கே. அங்க வைக்கலாமே.''

மாரிமுத்துவுக்குச் சுருக் என்றது.

''அங்க வரிசையா பிராந்திக் கடை இருக்கு ஸார்'' என்றார்.

''அட! சிலைதான ஸார்.''

''காந்தி சிலை ஸார்'' என்றார் மாரிமுத்து கொஞ்சம் கடுமையாக.

''அப்ப நீங்க ஹைவேஸுக்கு அப்ளை பண்ணுங்க....'' என்றதும் எழுந்து கொண்டார்கள்.

நெடுஞ்சாலைத்துறை அதிகாரி இவர்களை மேலும் கீழும் பார்த்தார். மனுவைப் படித்தார்.

''சரி வாங்க'' என்றார்.

''ஸார்... சிலை ரெடியாயிட்டுது... அக்டோபர் ரெண்டாந்தேதி திறக்கணும்....





**அபராதம் அபாரம்!**

1792 - ல் ஒரு புதுச்சட்டம்: குற்றங்களுக்காக விதிக்கப்பட்ட அபராதத் தொகையில் ஒரு பகோடாவுக்குப் பதிலாகக் கிராமத்தில் இரண்டு மாமரங்களும், இரண்டு பெரிய வகை நாவல் பழ மரங்களும் நட்டு, நீரிட்டுக் குறிப்பிட்ட உயரம் வளரும் வரை பாதுகாத்து வரலாம். இப்படி மரம் நட்டுப் பாதுகாப்பதன் மூலம் ஒவ்வொரு பகோடாவாக அபராதத் தொகை வைத்துக் குறைத்துக் கொண்டு விடலாம்! ஆமாம், இது யார் வகுத்த சட்டம்? திப்புசுல்தான்

சீக்கிரம் பர்மிஷன் கொடுத்தாத் தேவலை....''

''பர்மிஷன் நான் கொடுக்க முடியாதுங்க. எனக்கு அந்த அதிகாரம் கிடையாது. திருச்சியில் ரீஜினல் ஆபீஸ் இருக்கு. அவுங்க கொடுக்கணும். நான் இந்த அப்ளிகேஷனை அவுங்களுக்கு அனுப்பறேன்'' என்றார்.

சிலை தயாராகி விட்டதென்றும், வந்து எடுத்துச் செல்லுமாறும் தகவல் வர, எடுத்து வந்தார்கள்.

பொக்கை வாய்ப்புன்னகையுடன் காந்தியைப் பார்த்த கிராமிகளுக்குப் புல்லரித்தது. கை ராட்டினத்தால் நெய்யப்பட்ட நூல் மாலை போட்டு காந்தி சிலையை அலுவலகத்தில் வைத்தார்கள்.

''தாத்தா சிலை வைக்க பர்மிஷன் கொடுத்திட்டாங்களா....?''

பி.ஏ. படிக்கும் மாரிமுத்துவின் பேரன் கிண்டலாகக் கேட்டான்.

''திருச்சி ஆபீஸுக்கு அப்ளிகேஷனை அனுப்பி இருக்காங்க... கிடைச்சிடும்.''

''அவ்வளவு சீக்கிரம் பர்மிஷன் கிடைச்சிடும்னு நினைக்கிறீங்களா...?

''டேய் படவா... காந்தி சிலைடா... அலறிக்கிட்டு உடனே பர்மிஷன் கொடுப்பான் பாரு....''

''எனக்குச் சிரிப்பா வருது தாத்தா... சம்திங் கொடுக்காம நீங்க கொடுத்த அப்ளிகேஷனை இங்கிருந்து அனுப்பிடுவாங்களா....?''

''டேய்... காந்தி தேசம்டா இது... அவரு இல்லாட்டி இந்த சுதந்திரம் ஏதுடா... இல்லை நீதான் இப்படி பொழுதுக்கு ஒரு சட்டை மாட்டிக்கிட்டு அலைய முடியுமா... போடா போக்கத்தவனே...'' என்றார் மாரிமுத்து கிண்டலாக.

ஒரு மாதமாகியும் திருச்சி அலுவலகத்தில் இருந்து தகவல் ஏதும் வராமல் போகவே, மாரிமுத்து திருச்சி செல்வதென்று முடிவு செய்தார்.

அடுத்த நாளே புறப்பட்டார்.

அலுவலகத்தில்....

''காந்தி சிலை வைக்கிறது சம்பந்தமாவா... அப்படி ஏதும் உங்க ஊர் ஆபீஸிலேர்ந்து எங்களுக்கு பேப்பர் வரலியே...'' என்றார் அந்த அதிகாரி. மாரிமுத்துவுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

''அப்ளிகேஷன் கொடுத்து ஒரு மாசமாச்சி ஸார்.... உடனே இங்க அனுப்புறதாச் சொன்னாங்க...''

''ஏதும் வரலிங்க... வந்திருந்தா இல்லேன்னு சொல்லுவனா, நீங்க எதுக்கும் அடுத்த வாரம் வந்து பாருங்க.''

மாரிமுத்து சோர்வாக அலுவலகத்தை விட்டு வெளியே வந்தார்.

''இன்னும் என் பார்வைக்கே வரலைங்க... நீங்க என்னைக்குக் கொடுத்தீங்க?'' என்றார் உள்ளூர் நெடுஞ்சாலைத் துறை அதிகாரி.

''போன மாசம் பதினாலாந்தேதி ஸார்'' என்றார் மாரிமுத்து திகைப்பாக.

''அட உங்க ஃபைல் பார்க்கிற கிளார்க் பத்து நாளா லீவு ஸார்.... அவரு வந்தோன்ன உங்க விஷயத்தை கவனிக்கச் சொல்றேன்.''

''ஸார், அக்டோபர் மாசம் நெருங்கிக்கிட்டே இருக்கு.... இடையில் இன்னும் ஒரு மாசம்தான் இருக்கு!''

''உங்க அவசரத்துக்கு முடியாது ஸார். அரசாங்க வேலை, கொஞ்சம் மெதுவாத்தான் நடக்கும். அதுவும் ஹைவேஸ் ரோட்டுல சிலை வைக்கணுங்கிறீங்க.''

''காந்தி சிலைங்க.''

''அதான்... உங்க அப்ளிகேஷன் ரீஜினல் ஆபீசுக்குப் போகணும். அதிகாரிங்க இடத்தைப் பார்த்துட்டு நோ அப்ஜெக்ஷன் சர்டிபிகேட் கொடுக்கணும்... போக்குவரத்து உள்ள ரோட்டுல வைக்கணுங்கிறீங்க... ஆர்.டி.ஓ. வந்து பார்க்கணும்.. முறைப்படி நடக்கும். போயிட்டு வாங்க.''

மாரிமுத்து வெளியேற, அங்கு நின்ற ஒரு பியூன் ''ஸார்'' என்றான்.

''இங்க வாங்க'' என்றவன் அவரை ஓரமாக அழைத்துச் சென்று கிசுகிசுத்தான்.

''விவரம் தெரியாத மனுஷனா இருக்கீங்க. இப்படி போனா ஒண்ணும் நடக்காது. சம்திங் வெட்டுங்க... இல்லாட்டி உங்க ஃபைல் ஒரு வருஷமானாலும் இந்த ஆபீஸ் விட்டு நகராது!''

மாரிமுத்துவுக்குச் சர்ரென்று கோபம் ஏறியது.

''யோவ் என்ன நினைச்சிக்கிட்டு இருக்கீங்க... காந்தி சிலை வைக்க உங்களுக்கு

லஞ்சம் கொடுக்கணுமா....?'' என்றார் குரலை உயர்த்தி.

''யாரு சிலையா இருந்தா எங்களுக்கென்ன... எங்களைப் பொறுத்தவரைக்கும் அது ஒரு வேலை.... எந்த வேலையையும் நாங்க பணம் வாங்காம செய்யறதில்லை. பணம் கொடுக்க வேணாம்... நீங்க சிலை வைக்கிறதப் பார்த்துடுவோம்....'' பியூன் சவாலாகச் சொல்லிவிட்டுப் போக, மாரிமுத்து அதிர்ச்சியாகி நின்றார்.

அடுத்து வந்த தினங்களில் நெடுஞ்சாலைத்துறை அலுவலகத்திற்கு அலையாய் அலைந்த மாரிமுத்துவுக்கு ஒன்று புரிந்தது. கஷ்டப்பட்டு வாங்கிய சுதந்திரம் தவறான மனிதர்கள் கையில் சிக்கியிருக்கிறது என்று.

சம்பந்தப்பட்ட கிளார்க்கை பார்க்க நெடுஞ்சாலைத்துறை அலுவலகத்திற்குச் செல்லும்போதெல்லாம் அவரது தலையைப் பார்த்ததுமே கிளார்க் மாயமாய் மறைந்தார். கேட்ட கேள்விக்குச் சரியான பதில் இல்லை.

நொந்து போன மாரிமுத்து வேறு வழியே இல்லாமல், நடந்த அத்தனையையும் விவரமாக எழுதி, சிலை வைக்க உத்தேசித்த இடத்தைப் புகைப்படம் எடுத்து எல்லா தியாகிகளிடமும் கையெழுத்து வாங்கி முதல்வருக்கு, மந்திரிக்கு அனுப்பி வைத்தார்.

நீண்ட நாட்களாக டெல்லிக்கு அழைத்துக் கொண்டிருந்த மாரிமுத்துவின் மகன் டிக்கெட் எடுத்து அனுப்பி வைக்க, டெல்லி புறப்பட்டுப் போனார். ஒரு மாசம் மகன் வீட்டில் தங்கிப் பேரனைக் கொஞ்சிவிட்டு ஊர் திரும்பிய மாரிமுத்து, பஸ் ஸ்டாண்டில் இறங்கியதுமே அதிர்ந்தார்.

எந்த இடத்தில் காந்தி சிலை வைக்க முடிவு செய்து, நெடுஞ்சாலைத் துறைக்கு மனு செய்து அலையாய் அலைந்தாரோ... அந்த இடத்தில் அராஜகத்தின் உயிர் நீத்த ஒரு லோக்கல் தலைவரின் சிலை அமர்க்களமாய் அமர்ந்திருந்தது.

வெறுத்துப் போய் சங்க அலுவலகம் வந்தார். அங்கு வந்திருந்த ஒரு கடிதத்தைப் படித்ததும் அழுகையே வந்து விட்டது அவருக்கு.

ஒரு வழக்குரைஞர் எழுதியிருந்த கடிதம் அது. தமது கட்சிக்காரர்களிடம் காந்தி சிலை வைப்பதாகப் பொய் சொல்லி நிதிவசூல் செய்ததாகக் குற்றம் சாட்டியும் அவர்மேல் ஏன் மோசடி வழக்குத் தொடரக் கூடாது என்று கேட்டும் மாரிமுத்துவுக்கு நோட்டீஸ் அனுப்பியிருந்தார் அவர்.

மாரிமுத்து அங்கிருந்த மகாத்மா சிலையைப் பரிதாபமாகப் பார்த்தார்.


**புகழ்பெற்ற நாவலாசிரியை ரமணிசந்திரனின் நாவல்கள்**

| | |
|---|---|
| வாசவி | 13.00 |
| நாள் நல்ல நாள் | 30.00 |
| இனிவரும் உதயம் | 25.00 |
| ராமன் தேடிய சீதை | 18.00 |
| பொழுது விடிகிற வேளையிலே | 30.00 |
| பானுமதி | 12.00 |
| வைரமலர் | 40.00 |
| இறக்கு வெறுத்ததம்மா | 24.00 |
| பால் நிலா | 35.00 |
| நின்னையே ரதி என்று | 12.00 |
| இது ஓர் உதயம் | 10.00 |
| என் உயிரே கண்ணம்மா | 15.00 |
| என் கண்ணில் பாவையன்றோ | 25.00 |
| மெல்லத் திறந்தது கதவு | 15.00 |
| பூங்காற்று | 22.00 |
| ஒரு மலர் | 25.00 |
| மானே மானே மானே | 25.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை | 15.00 |
| மதுமதி | 15.00 |
| நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் | 14.00 |
| மயங்குகிறாள் ஒரு மாது | 32.00 |
| காதலெனும் சோலையிலே | 36.00 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | 36.00 |
| தொடுகோடுகள் | 30.00 |
| விடிவதைத் தேடும் பூபாளம் | 22.00 |
| கண்ணே கலைமானே | 22.00 |
| தாரகை ஒளியிலே | 15.00 |
| லாவண்யா | 20.00 |
| அவனும் அவளும் | 20.00 |

**புத்தம் புதிய சரித்திர நாவல் வே. கபிலன் எழுதிய**

| | |
|---|---|
| பெருந்துறை நாயகன் | 50.00 |

**பட்டுக்கோட்டை பிரபாகரின்**

| | |
|---|---|
| மன்மதன் வந்தானடி | 28.00 |
| புன்னகை போதும் | 24.00 |
| பிருந்தாவனமும் நொந்தகுமாரனும் | 22.00 |
| தொட்டுவா தென்றலே | 30.00 |
| நடமாடும் சொர்க்கம் | 25.00 |
| கொலை நேரம் காலை 10 மணி | 20.00 |
| அதிகாலைத் தீர்ப்பு | 25.00 |
| என் இனிய எதிரி | 26.00 |

**ராஜேந்திர குமாரின்**

| | |
|---|---|
| நீ நீயா? | 22.00 |

**அமுதா கணேசனின்**

| | |
|---|---|
| மருமகளே வருக | 27.00 |
| பாடாத தேனீ | 22.00 |

**அருணோதயம்**

3, கௌடியா மடம் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.

நவரச நினைவுகள் - 2

# வாழ்க்கையை வதைக்கும் வதந்திகள்!



பரிவுடன் பேசினார் எல். வி. பிரசாத்: ''என்னம்மா, இப்படி அழறே...? அந்தக் காட்சியில நான் எதிர்பார்த்த அளவுக்கு நீ செய்யல... அதனால உனக்கு ஒரு 'ஷாக் ட்ரீட்மெண்ட்' கொடுத்து அழ வைக்க லாம்னுதான் அப்படிப் பேசினேன்... உன் மனசைப் புண்படுத்தற எண்ணம் எனக்கு இல்லை....'' என்றார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு 'சௌகார்' படப்பிடிப்பு தொடர்ந்தது. அந்தப் படம் எனக்குப் பெயர் வாங்கித் தந்தது என்று இருபொருள்படச் சொல்லலாம்! - நடிகை என்ற ரீதியில் நல்ல பெயர். 'சௌகார்' என்ற அடைமொழிப் பெயர்!

உண்மையில் அப் படத்தில் என் மாமனாராக நடித்த கதாபாத்திரம்தான் 'சௌகார்'. சௌகார் என்றால் 'பணக்காரர்', 'நிலச் சுவான்தார்' என்று பொருள். அவர்தான் பிரதான பாத்திரம் என்பதால் படத்துக்கு அப் பெயர் வைத்தார்கள். நான் சௌகார் படத்தில் வெற்றிகரமாக நடித்துத் தமிழ்த் திரையுலகில் அடியெடுத்து வைத்த போது அங்கே இன்னொரு ஜானகியும் இருந்தார்! அவர்தான் வி. என். ஜானகி. எனவே ஓர் அடையாளத்துக்காக 'சௌகார் ஜானகி' ஆனேன் நான். இந்தப் பெயரே நிலைத்தும் விட்டது.

'சௌகார்' எனக்கு மட்டும் முதல் படமல்ல... விஜயா புரொடக்ஷன்ஸ் நிறுவனத்துக்கும் அதுவே முதல் படம். நாகிரெட்டியும் சக்கரபாணியும் இணைந்து அதைத் தயாரித்தார்கள். கேமராமேன் புகழ் பெற்ற மார்கஸ் பார்ட்லி.

இந்தப் படத்துக்குப் பணியாற்றும் போது திரையுலகுக்கே புதியவள் என்பதால் நான் யாருடனும் பழகவேயில்லை. என் வேலை முடிந்ததும் தனியாக ஒரு மூலையில் போய் உட்கார்ந்து விடுவேன்.

நான் இப்படி இருப்பதைக் கவனித்த எல். வி. பிரசாத், ''எல்லோருடனும் வலியப் போய் அரட்டையடிக்காவிட்டாலும் கூட, இப்படி ஒதுங்கியிருப்பது சரியில்லை. மற்றவர்களுடன் சகஜமாய்ப் பழகு'' என்று அறிவுரை கூறினார். அவர் அறிவுரையை ஏற்றுக் கொண்டு எல்லோருடனும் நட்பாகப் பழக நானும் முற்பட்டேன். ஆனால் இதனால் வேண்டாத விளைவுகளும் ஏற்படும் என்று நான் அப்போது எதிர்பார்க்கவில்லை.

அந்தப் படத்தில் நடித்துக் கொண்டிருந்த போது, ஒரு தெலுங்கு எழுத்தாளருடன் எனக்கு அறிமுகம் ஏற்பட்டது. அவர் ஒரு சிறந்த கவிஞரும் கூட.

அவ்வப்போது அவர் என்னிடம் வந்து ஏதாவது பேசுவார். மாலை நேரங்களில் என்னைத் தேடி வந்து தாம் எழுதிய கவிதைகளை எனக்குப் படித்துக் காட்டுவார்.

நாங்கள் இருவரும் இப்படிப் பழகுவதைப் பற்றிச் சீக்கிரமே வதந்திகள் பரவ ஆரம்பித்தன. இந்த விஷயம் என் குடும்பத்திலும் பிரச்னைகளை உருவாக்க ஆரம்பித்தது...

ஒருநாள் மாலை அவர் வழக்கம் போல் என்னிடம் வந்து ஒரு கவிதை படித்தார். சினிமா உலகத்துக்குள் நுழையும் ஒரு புது முகத்தைப் பற்றிய அந்தக் கவிதையை அவர் என்னை மனத்தில் வைத்துக் கொண்டுதான் எழுதியிருந்தார் என்பதை யூகிப்பது சிரமமாக இருக்கவில்லை.

**சௌகார் ஜானகி**

மனம் மகிழவும் நெகிழவும் செய்தது. அதை அக் கவிஞர் உணர்ந்தே அறிந்திருப்பார் என்றாலும் நான் வாய் விட்டுப் பாராட்டுத் தெரிவிக்கத் தவறவில்லை. அவருக்கும் அந்தப் பாராட்டினால் ஏக மகிழ்ச்சி.

ஆனால் அந்தக் கவிதையே ஒரு மிகப் பெரிய பிரச்னையை உருவாக்கப் போகிறது என்பது எங்களுக்கு அப்போது எப்படித் தெரியும்...?

**நா**ன் நடித்துக் கொண்டிருந்த படத்துக்குப் பணியாற்றி வந்த அந்தக் கவிஞர் ஒருநாள் படப்பிடிப்புக்கு வரவேயில்லை... அவர் ஏன் வரவில்லை என்று யாரிடமாவது விசாரிக்கலாமா என்ற எண்ணத்தை ஒதுக்கி வைத்தேன். அப்படி விசாரிப்பதன் மூலம் இன்னும் சில வதந்திகளுக்கு வித்திடுவோம் என்கிற எச்சரிக்கை உணர்வே காரணம்.

மற்றொரு சமயம் அந்த நண்பரைச் சந்திக்க நேர்ந்த போது தமக்கு அந்தப் படத்தில் வேலை வாய்ப்பு ரத்து செய்யப்பட்டிருந்த உண்மையை என்னிடம் கூறினார்.

எனக்கு அதிர்ச்சியும் வேதனையுமாக இருந்தது. நாங்கள் மனம் விட்டுப் பழகிய நல்ல நண்பர்கள்; அவருடைய கவிதை கவின்பால் எனக்கு ஈர்ப்பும் என்னுடைய வெகுளித்தனத்தின் பேரில் அவருக்குக் கழிவிரக்கமும் இருந்தன. ஆனால் சினிமா உலகமும் சரி, அதைக் கடந்த குடும்ப வட்டாரமும் சரி இந்த உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமல் கொச்சைப்படுத்தி விட்டன.

வேலையிழந்த நண்பருக்காக வேதனைப்படுவதைத் தவிர வேறு எதையும் என்னால் செய்ய முடியவில்லை. எனினும், அவருடைய திறமை வீணாகிப் போவதில் எனக்குச் சம்மதமில்லை. அப்படி வீணாவதற்கு என் நட்பு ஒரு காரணமாகும் பட்சத்தில் அதைத் துண்டித்துக் கொள்ளவும் நான் தயாராயிருந்தேன்.

ஆனால் அதற்கு அவசியம் ஏற்படாமல் வேறு வாய்ப்புக்கள் அவரைத் தேடி வந்தன... மிகச் சாதாரண நிலையில் சினிமா உலகுக்குள் நுழைந்த அவர், தமது திறமையால் ஏராளமான பெயரும் புகழும் சம்பாதித்தார். அவரது ஒவ்வொரு கட்ட வெற்றியையும் நான் கவனித்து மகிழ்ந்ததுண்டு.

**கை**க் குழந்தையுடன் சினிமா வாய்ப்புக் கேட்டு நான் மிகப் பிரபல திரைப்பட நிறுவனத்தின் படியேறிச் சென்ற போது, நடிக, நடிகையரைத் தேர்வு செய்யும் பொறுப்பிலிருந்தவரைச் சந்திக்க அழைத்துச் செல்லப்பட்டேன்.

அந்த வாலிபருக்குச் சுருட்டை முடி, பளிச்சென்று சிவந்த நிறம்; ஒரு விளையாட்டு வீரரின் பிரமிப்பூட்டும் உடற்கட்டு. அவரது தோற்றம் மிகவும் கவர்ச்சியாக இருந்தது. கூடவே குரலிலும் நடத்தையிலும் ஒரு கண்ணியம்.

அவர் அறைக்குள் கைக் குழந்தையுடன் நான் நுழைந்த போது 'என்ன வேண்டும்?' என்று ஆழமாய் ஒரு பார்வை பார்த்தார். நான் சினிமா சான்ஸ் தேடி வந்திருப்பதைத் தெரிவித்தேன். கையில் குழந்தையுடன் ஒரு பெண் சினிமா வாய்ப்புக் கேட்டு வந்திருப்பது அவருக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். ''இது யாருடைய குழந்தை?'' என்று கேட்டார்.

''என் குழந்தைதான்,'' என்று கூறியதுடன், நான் எந்த சூழ்நிலையில் நடிக்க வந்திருக்கிறேன் என்பதை விளக்கியதும் அவருக்கு என் மீது அனுதாபம் பிறந்து விட்டது.

''சரி! குழந்தையைக் கீழே விட்டு விட்டு, இந்தச் சுவர் பக்கத்தில் வந்து நில்லுங்கள்'' என்றார். சுவரை ஒட்டி நான் நின்றதும், என் தலை உயரத்தில், சுவரில் ஒரு கோடு போட்டார். பின்னர் என்னை நகர்ந்து கொள்ளச் சொல்லி விட்டு, சுவரில் இஞ்ச் டேப் வைத்து என் உயரத்தை அளந்தார்.

''என்ன ஐந்தடிதானா?'' என்றார் சிறிது ஏமாற்றத்துடன். தொடர்ந்து கேட்டார்: ''நடித்த அனுபவம் உண்டா?''

ஆந்திர மகிள சபா பள்ளி நாடகங்களிலும், சென்னை அகில இந்திய ரேடியோ நாடகங்களிலும் நடித்தது தவிர, வேறு அனுபவமில்லை என்றேன்.

''புகைப்படங்கள் ஏதாவது இருந்தால் கொடுத்து விட்டுச் செல்லுங்கள். இப்போது வாய்ப்பு எதுவும் இல்லை; பிற்பாடு சந்தர்ப்பம் வந்தால் சொல்லியனுப்புகிறேன்'' என்று எனக்கு விடைகூறி அனுப்பி வைத்த அந்த நபருடன் பின்னர் நான் கதாநாயகியாக பல வெற்றிப் படங்களில் நடித்தேன். அவர் யார்...? அடுத்த வாரம் சொல்கிறேன்!

(தொடரும்)



* "நூல்கள் : உலகைப் பார்க்க உதவும் ஜன்னல்கள்"

# நிர்வாக இயலைப் புரிந்து கொள்ளுங்கள்!

*நேர்முகத் தேர்வுக்குச் செல்வோருக்கு யோசனைகள் கூறும் நூல்கள் ஏராளம். ஆனால் இந்தப் புத்தகமோ நேர்முகத் தேர்வாளர்களுக்கே அறிவுரை வழங்குகிறது! நிர்வாக இயலை விளக்கமாகப் புரிந்து கொள்ள வழிவகுக்கும் "வெற்றிக்கு வழிகாட்டும் மேலாண்மை" என்ற நூலிலிருந்து சில பகுதிகள்.*

●● நேர்முகத் தேர்வுக்கு வருபவர்களை முதலில் வசதியாக அமர வைத்தபின், இயல்பாகப் பதற்றமில்லாமல் இருக்கும் ஒரு இணக்கமான சூழ்நிலையை உண்டாக்க வேண்டும். 'அவருக்கு என்னென்ன தெரிந்திருக்கின்றன? என்னென்ன திறமைகள் அவரிடம் பொதிந்துள்ளன? எந்தெந்த வகைகளில் அவரைப் பயிற்றுவித்து, ஊக்குவித்து மேலும் உயர்ந்த வகையில் பயன் பெறலாம்?' என்ற நோக்கோடு, அவற்றை வெளிப்படுத்தும் வகையில் கேள்விகள் கேட்க வேண்டும். என்னென்ன அவருக்குத் தெரியவில்லை? அவருடைய குறைபாடுகள் என்னென்ன என்பனவற்றை வெளிக் கொண்டு வருவதற்காகக் கேள்விகள் கேட்கத் தேவையில்லை.

●● தனக்குக் கீழே வேலை பார்க்கும் அதிகாரி தன் அதிகார வரம்புக்கு உட்பட்டதைக் கூட மேலே அனுப்பும் போது மெய் சிலிர்த்துப் போகும் மேலதிகாரி, அவர் தம் பணியை ஆற்ற முடியாமல் இருக்கிறார் என்பதையோ, அப்படிப்பட்டவரை மேலதிகாரியாக்கித் தான் தவறு செய்து விட்டதையோ எண்ணிப் பார்க்க மறந்து விடுகின்றார்.

●● மகாத்மா காந்தியடிகளின் கதர்ப் பொருளாதாரம் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டியதாகிறது. "சும்மா இருக்கும் மனம் சாத்தானின் பணிக்கூடம்" என்று கூறுவர். ஆகவே வேலை வாய்ப்புக் கொடுத்து இளைஞர்களைச் சீராகப் பயன் படுத்தாவிட்டால் அன்னோர் ஓர் எதிர்ப்புச் சக்தியாக உருவாகி விடுவார்கள். நம் நாட்டின் சூழ்நிலைக்குப் பரவலான, குறைந்த இலாபமானாலும் எல்லோரையும் பயன் படுத்துகிற பொருளாதார அமைப்பே சிறந்தது என்பது அந்தச் சித்தாந்தம். அந்த அடிப்படையில், சிந்தித்தால் மிகுந்த தொழிலாளர்களின் வேலை வாய்ப்பை விழுங்கும் 'நவீனப்படுத்துதல் சித்தாந்தம்' நமக்குத் தேவையன்று என்ற கருத்துத்தான் மிஞ்சும்.

●● ஆன்மீகம் என்றால் என்ன? லௌகீகம் என்றால் என்ன? என்று அகத்தியரின் அம்சமான ஸ்ரீ முத்துக் கிருஷ்ணஸ்வாமி அவர்களிடம் கேட்கப் பட்டது. அவர்கள் சொன்னார்கள்: "நாம் செய்வது எல்லாமே ஆன்மீகம்தான் என்ற எண்ணம் வரும் வரை நாம் செய்வதுதான் லௌகீகம்."

"ஒரே பணியை இருவர் செய்கின்றார்கள். ஆனால் எண்ணம் வேறுபடுகின்றது. செயலும் வேறாகின்றது. உணவு கண்டவுடன் அள்ளி அள்ளிப் போடுகிறான் ஒருவன்; அது சாப்பாடு ஆகின்றது. அதே உணவை மனத்தால் ஆண்டவனுக்கு அர்ப்பணித்து விட்டு அதையே பிரசாதமாகச் சாப்பிடுகின்றான் ஒருவன். அங்கே அது பிரசாதம் ஆகின்றது. ஆன்மீகம் ஆகி விடுகிறது.

தொகுப்பு : பாலன் பூங்குழலி

ஆசிரியர் : டி. ஆர். கண்ணப்பிரான், விலை ரூ 65 - கங்கை புத்தக நிலையம், 13 தீனதயாளு தெரு, சென்னை - 17.

# அன்புள்ள அலமு அத்தை,



குருவிகள்லாம் எறும்பைப் புடிச்சு உடம்பு மேலே விட்டுக்கும்னு நம்பவே முடியலியே! என் ஃப்ரண்ட்ஸ் யாராவது எழுதியிருந்தா ரீல் விடறாங்கன்னுதான் நினைச்சிருப்பேன். நீ எழுதினதாலே நம்பறேன். பப்லுவும் நம்பறா.

நேத்திக்கு பப்லுவோட சண்டை போட்டேன். ஆனால் கொஞ்சமாத்தான். ஏன் தெரியுமா? அம்மா என்னை கப் ஸ்பூனெல்லாம் கழுவச் சொன்னாங்க. நேத்து ஐஸ்க்ரீம் சாப்பிட்டதாலே நிறைய கப், ஸ்பூன் இருந்தது. 'இதையெல்லாம் கழுவறது girls வேலை; அதனால நீதான் கழுவ ணும்'னு பப்லுகிட்டே சொன்னேன். அவ முடியாதுன்னு கத்தின நேரத்துல அப்பா வந்தார்.

என்ன நடந்ததுன்னு கேட்டதும் அப்பா என்னைத்தான் திட்டினார். 'பாஸ்கர் கூட பாத்திரம் கழுவறது, சமையல் செய்யறதெல்லாம் girls வேலைதான்னு சொல்லியிருக்கான்'னு அப்பாகிட்டே சொன்னேன். உடனே அவர் 'இப்போ நீங்க இரண்டு பேருமே கழுவ வேண்டாம்'ன்னு சொல்லிட்டு எல்லாத்தையும் அஞ்சு நிமிஷத்துல அவரே கழுவி வைச்சுட்டார்.

'இப்போ சொல்லு, இது girls வேலையா?'ன்னு கேட்டார். நான் இல்லைன்னு சொல்லிட்டு அவர் கழுவினதெல்லாம் துடைச்சு வைச்சேன். பப்லு ஹெல்ப் பண்ணினா.

பம்பரம் விளையாடப் போன போது பப்லுவும் கூட வந்தா. பையன்களெல்லாம் கர்ல்லை சேத்துக்க முடியாதுன்னு சொன்னாங்க. அப்பறம் நான்தான் பப்லுவுக்குப் பம்பரம் விடச் சொல்லிக் குடுத்தேன். ஆனால் அவளுக்கு இன்னும் சரியாவே வரலை. அப்பா பப்லுவுக்குத் தனியா புது பம்பரம் வாங்கித் தரப் போறார். அதனால் பப்லு ரொம்ப ஜாலியா இருக்கா...

உன் அன்புள்ள,

அருண்

## நீங்கள் கேட்டவை - தராசு

# "நான் வெட்கப்படவில்லை"

● வெங்கட், நாட்டரசன்கோட்டை.

*? ம. கா. பல்கலைக் கழகத்தில் மலையாளத்தில் டாக்டர் பட்டம் பெற விண்ணப்பித்திருந்த ஒரு மாணவியின் ஆய்வை, மலையாளம் தெரியாத ஒருவர் பரிந்துரை செய்தது கண்டுபிடிக்கப்பட்டு, டாக்டர் பட்டம் வழங்குவது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளதே?*

! டாக்டர் பட்டம் வழங்குவதில் நடக்கும் பல்வேறு ரக ஊழல்களை ஆய்வு செய்து, அதிலேயே டாக்டர் பட்டம் வாங்கக்கூடிய காலம் இது!

● கே. எம். ஜான்முகமது, இளையான்குடி.

*? கருணாநிதிக்கும் ஜெயலலிதா அரசுக்கும் இடையே என்ன வித்தியாசம் காண்கிறீர்கள்?*

! அது ஃபாஸ்ட்; இது சூப்பர் ஃபாஸ்ட். எதில் என்பது எல்லோருக்கும் தெரியும்!

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? "பம்பாய்க் கலவரங்களைக் கண்டு எனக்கு நானே கொடுத்துக் கொண்ட தண்டனையாக எனது எம்.பி. பதவியை ராஜினாமா செய்தேன்" என்று சுனில்தத் கூறியுள்ளாரே?*

! அவரது தார்மீகப் பொறுப்புணர்வு பாராட்டுக்குரியது என்றாலும் இத்துடன் நின்று விடாமல் இருதரப்பினருக்கும் இடையே நல்லிணக்கம் வளரவும் அவர் பாடுபட வேண்டும்.

● மல்லிகை மன்னன், மதுரை.

*? "பாபர் மசூதி இடிக்கப்பட்டதற்காக நான் வெட்கப்படவில்லை" என்கிறாரே அத்வானி?*

! அப்படியானால் அவர் பங்களாதேசிகள் "படையெடுத்து" வந்ததற்கு வெட்கப்படவில்லை; அவர்களில் பலர் கட்டுத் தள்ளப் பட்டதற்கு வெட்கப்படவில்லை; அண்டை நாடுகளில் கோயில்கள் இடிக்கப்பட்டதற்கு வெட்கப்படவில்லை; பம்பாய் பற்றி எரிந்ததற்கு அவர் வெட்கப்படவில்லை; நாடெங்கும் நடந்த கலவரங்களில் பல்லாயிரக்கணக்கானோர் செத்து மடிந்ததற்கு வெட்கப்படவில்லை; உலகத்தின் கண்டனத்துக்கு அத்வானி வெட்கப்படவில்லை. ஐயா, அத்வானி அவர்களே! உங்களுக்காக நான் வெட்கப்படுவது தவிர வேறு வழியில்லை!

* கருகிச் செத்து...



* அதிரடி நடவடிக்கை



● மீனாட்சி சுந்தரம், கடம்பநல்லூர்.

*? இந்த வருடம் யாரா வது தபால் தலையில்லாமல் பொங்கல் வாழ்த்து அனுப்பினார்களா?*

! இல்லை. ஆனால் வாழ்த்துக்களும் வேறு பல கடிதங்களும் கூட "சர்வீஸ்" ஸ்டாம்பு ஒட்டி வருகின்றன. பல்வேறு மலை முழுங்கி ஊழல்களுக்கு இடையில் இப்படியும் ஒரு அற்ப ஊழல்!

* உடன்பாடு உண்டு



● ஆர். கருணாகரன், மேட்டூர் அணை.

*? ஒரு லட்சத்து ஐம்பத்து ஒன்றாயிரத்தைக் காவல் துறையிடம் ஒப்படைத்த அந்தோணிசாமி, 'பிழைக்கத் தெரியாத ஆள்' என்கிறேன், நீங்கள்?*

! தப்பு அட்ரெஸ் தந்து அசடு வழிந்த அரசியல்வாதி இவரை விடவும் பிழைக்கத் தெரியாத ஆளாகி விட்டாரே!

● அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

*? "நியாயமான விளைவைக் காண, சில நேரங்களில் தவறான வழிமுறைகளைக் கையாளலாம்; அதன் பெயர் கிருஷ்ண நீதி" என்கிறார்களே ஆர். எஸ். எஸ். காரர்கள்?*

! கிருஷ்ண பரமாத்மா செய்ததையெல்லாம் எல்லாரும் செய்யலாம் என்று சில அரை வேக்காடுகள் நினைத்து விடுவார்கள் என்பதால்தான் "சரியான இலக்குகளை அடைவதற்குக் கூடத் தவறான வழிமுறைகளைக் கையாளாதே" என்று காந்திஜி கற்றுத் தந்தார்.

* ஃபாஸ்ட்



* சூப்பர் ஃபாஸ்ட்



● கே. எஸ். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? ஜவாஹர்லால் நேரு விளையாட்டு அரங்கம் பற்றிச் சில வரிகள்?*

! சில வரிகள் என்ன பல பக்கங்கள் பாராட்டி எழுதியாகி விட்டது. ஆனால் ஆதங்கம் என்னவென்றால்

# என்கிறாரே அத்வானி?

இதே செயல் வேகத்தை மக்கள் நலத் திட்டங்களை நிறைவேற்றுவதில் முதல்வர் காட்டவில்லையே என்பதுதான். உதாரண மாக இப்போதே ஒரு நாள் விட்டு ஒருநாள் தண்ணீர் விநியோகம். அடுத்த இரு மாதங் களில் சென்னையில் கடும் தண்ணீர்ப் பஞ்சம் உருவாகப் போகிறது. அப்போது, ''கிருஷ்ணா நதி நீர்த் திட்டம் என்ன ஆச்சு?'' என்றுதான் மக்கள் கேட்பார்களே தவிர, நேரு ஸ்டேடியத்தைப் பார்த்து மகிழ மாட் டார்கள்.

● மஞ்சுதேவன், கல்கத்தா.

*? தஞ்சாவூர் பாணி சித்திரங்களுக்கு நல்ல மவுசு போயிருக்கிறதே?*

! அதைப் புரிந்து கொண்டுதான் சிலர் புது ஓவியங்களைக் கூடப் பழசு மாதிரி பண்ணி எக்கச்சக்க விலைக்குத் தள்ளி விடுகிறார்கள்! எச்சரிக்கை தேவை!

● கோ. ரா. சந்திரன், சங்கரன்கோயில்.

*? அதிபர் பதவிக் காலம் முடிவடையச் சில நாட்களே உள்ள நிலையில் புஷ் இத்தகைய அதிரடி நடவடிக்கை எடுத்தது சரிதானா?*

! 1. கிளிண்டன் பதவி ஏற்கும் வரை அதி காரத்தில் இருப்பவர் புஷ்தான் என்றாலும் கிளிண்டனுக்கும் உடன்பாடு உண்டு என்ப தைச் சூசகமாக அவரது அறிக்கை வெளி யிடுகிறது. 2. அமெரிக்க அரசியல் சாசனப் படி அதிகாரங்கள் குவிந்திருப்பது ஜனாதி பதியிடமே. 3. புஷ் தனித்து இயங்க வில்லை; வேறு பல உலக நாடுகள் ஒத்து ழைப்புடன், ஐ.நா. அங்கீகாரத்துடன் செயல்படுகிறார். 4. எனவே, புஷ் எடுத்த நடவடிக்கை சரிதான்; சரி இல்லாதது ஸத்தாம் ஹுஸேனின் அடாவடித்தனம் தான்.

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

*? ஆயுதம் தாங்கிய கப்பலுடன் விடுதலைப் புலிகள் சென்னைக் கடற்கரை நோக்கி வந்ததிலிருந்து என்ன தெரிகிறது?*

! அவர்களது நோக்கம் சென்னைக்கு வருவதோ, தாக்குவதோ அல்ல. கிட்டு இலங்கை சென்று பிரபாகரனுடன் ஆலோ சனை நடத்த விரும்பியிருக்கிறார். அவருக் குப் பாதுகாப்பாகப் பலர் ஆயுதங்களுடன். ஆனால் இன்று விடுதலைப் புலிகள் இந்திய அரசுக்குப் பரம விரோதிகள் ஆகி விட்ட தால் அந்தக் கப்பலை வளைத்துப் பிடிக்க நமது கடற்படை முயன்றிருக்கிறது. புலிகள் என்றுமே கைதாக விரும்ப மாட்டார்கள். தங்களையே அழித்துக் கொள்வார்கள். அப்படித்தான் கிட்டுவும் அவருடன் சிலரும் கப்பலைக் கொளுத்தி விட்டுக் கருகிச் செத்து மடிந்திருக்கிறார்கள். கைப்பற்றப்பட்டவர்



✱ கற்றுத் தந்தார்



✱ வெட்கப் படவில்லை

களுக்கு உயிராசை ஓரளவு இருந்திருக்க வேண்டும். இதைப் புரிந்து கொள்ளாமல் வாழப்பாடியார் சம்பவத்தைத் திசை திருப்பி, விடுதலைப் புலி பூச்சாண்டி காட்டித் துள்ளுவதுதான் வேடிக்கை.

● ஆர். உமா, திருச்சி.

*? சென்னையில் தற்போது கட்டப்பட் டுள்ள நேரு ஸ்டேடியம் ஆசியாவிலேயே மிக உயர்ந்ததாமே?*

! ஆமாம். அதன் திறப்பு விழாவில் ஜிங்சக் தாளத்தில் ஜெ துதியாக நடனப் பாடல் அமைந்ததும், ஒருவர் விடாமல் எல்லா அமைச்சர்களுமே அம்மாவை வணங்கிப் பக்கம் பக்கமாக நாளிதழ் விளம்பரங்கள் தந்ததும் தாம் உலக மகா தாழ்வு.

● ரா. அரிராம், வங்கநகர். ❑

*? பம்பாயில் கலவரங்கள் நடப்பதற்கும் பி.ஜே.பி.க்கும் தொடர்பு உண்டா?*

! 'மசூதி இடிப்புக் கலவரங்கள் அடங்கிப் பல தினங்கள் சென்று பம்பாய்க் கலவரங் கள் வெடித்ததால் சந்தேகம் ஏற்படுகிறது' என்ற பிரதமர், விசாரணைக்கும் உத்தரவிட் டிருக்கிறார். ஆனால் சி. எஸ். கூறுவது போல அயல்நாட்டுத் தலையீடு இருக்கும் என்று எண்ணுவதற்கில்லை. அமைதி குலையும் எனக் காரணம் காட்டி பி.ஜே.பி. அரசுகள் டிஸ்மிஸ் ஆனதால், 'காங்கிரஸ் ஆட்சியில் என்ன வாழ்கிறதாம்?' என்று உணர்த்த சிவசேனா தன் கை வரிசையைக் காட்டியிருக்கலாம். மசூதி இடிப்பதில் பி.ஜே.பி.யுடன் சிவசேனா முன்னின்றதை மறக்க முடியாது. குண்டர்களுக்கு அரசியல் வாதிகளிடம் ஏற்பட்டுள்ள செல்வாக்கும் கலவரங்களை முளையில் கிள்ளி எறிய முடியாமல் போனதற்கு ஒரு காரணம்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
அரிராம்,
த/பெ துரைசாமி நாடார்,
மளிகை, வங்க நகர்,
மருதவனம் அஞ்சல்,
திருத்துறைப்பூண்டி (வட்டம்).



# யானைகளைப் பாதிக்கும் வேலை நிறுத்தம்!

இந்தியாவிலேயே மிகப் பெரியது ''குருவாயூர் யானைக் கொட்டடி''தான். குருவாயூரப்பனுக்குச் சொந்தமான 41 யானைகள் இந்த மந்தையில் உள்ளன. இப்போது இந்த யானைகளுக்கான யானைப்பாகர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளார்கள்.

பிரச்னை என்னவென்றால் இங்குள்ள சுமார் 30 யானைகள், வெளியூர் திருவிழாக்களுக்கு அழைத்துச் செல்லப்படும். ஒரு நாளைக்கு இருபது கிலோ மீட்டர் தூரம் வரை யானைகளை அழைத்துச் செல்வார்கள் யானைப் பாகர்கள். அதற்கு மேல் மறுநாள்தான் செல்லும். இதற்காக ஒரு பாகனுக்கு ஒருநாள் டி.ஏ.வாக இருபது ரூபாய் கொடுப்பார்கள். இப்போது யானைகளைத் தினமும் முப்பது கிலோ மீட்டர் தூரம் நடத்திச் செல்ல வேண்டும் என ஆலய நிர்வாகம் கூறி உள்ளது. மிருக பாதுகாப்புச் சங்க விதிப்படி (SPCA) யானையைத் தினமும் முப்பது கிலோ மீட்டர் நடத்திச் செல்லலாம் என உள்ளதாம்.

தினமும் இருபது கிலோ மீட்டருக்கு மேல் எங்களால் யானைகளை நடத்திச் செல்ல முடியாது என யானைப் பாகர்கள் கூறி விட்டனர். காரணம், முப்பது கிலோ மீட்டர் நடத்திச் சென்றாலும் முன்பு போல 20 ரூபாய்தான் டி.ஏ. தருவோம் என நிர்வாகம் சொன்னதுதான்!

மேலும், யானைப்பாகர்கள் தினமும் காலை எட்டு மணி முதல் மாலை ஐந்து மணி வரை மந்தையில் கண்டிப்பாக இருக்க வேண்டும் என ஆலய நிர்வாகம் வேலை நேரத்தையும் நிர்ணயித்திருக்கிறது. இதற்கும் பாகர்கள் எதிர்ப்புத் தெரிவித்துள்ளார்கள்.

''தினமும் வந்து மந்தையைக் கழுவி விடுவது, யானைக்குத் தீனி போடுவது, அங்குமிங்கும் மாற்றிக் கட்டுவது போன்ற வேலைகளைச் செய்து விட்டு நாங்கள் போய் விடுவோம். அதுதான் இவ்வளவு நாளும் நடந்து வருகிறது. ஒரு பாகன் செய்யும் வேலை எட்டு மணி நேரம் இருக்க வேண்டும் என்று எப்படி நிர்ணயம் செய்ய முடியும்?'' என்பது அவர்கள் கேள்வி.

வேலை நிறுத்தம் தொடங்கி ஒரு மாதம் ஆகப் போகிறது. இதனால் குருவாயூரைச் சுற்றி உள்ள பல ஊர்களில் கோவில் திருவிழாக்களுக்கு யானைகள் கிடைக்காமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அண்மையில் திருவனந்தபுரத்தில் இடது கம்யூனிஸ்ட் ஆதரவு மாணவர் அணியின் (S.F.I.) எட்டாவது தேசிய மகாநாடு நடந்தது. இந்த மகாநாட்டை ஒட்டி S.F.I. பல துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டுள்ளது.

இந்த வெளியீடுகள் அனைத்திலும் ஆர்.எஸ்.எஸ்ஸுக்கும் ஜாதி அமைப்புகளுக்கும் கண்டனம் தெரிவிக்கும் பகுதிகளில் எல்லாம் காந்திஜியின் கருத்துக்களும் விவேகானந்தரது பொன் மொழிகளும்தாம் பெரிய அளவில் இடம்பெற்றுள்ளன.

''அதிகார போதையில் சிறுபான்மையினரை நசுக்கி, இந்து ராஜ்யம் அமைப்பது என்பது இந்து மதத்தை அழிக்கவே செய்யும்'' - காந்திஜி ஜனவரி 23 - 1948.

''நாம் எல்லோரும் முதலில் இந்தியர்கள். பிறகுதான் இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள்.'' - காந்திஜி ஜனவரி 26, 1922.

''உலகிற்கு சகிப்புத் தன்மையும் அஹிம்சையும் படிப்பித்த ஒரு மதத்தைச் சேர்ந்தவன் நான் என்பதில் பெருமைப்படுகிறேன். எல்லா மதங்களும் ஒரே மாதிரி சத்தியமானதுதான் என்பதிலும் எங்களுக்கு நம்பிக்கை உண்டு. அன்பும் சிநேகமும் அஹிம்சையும் ஒரு மதத்திற்கு மட்டும் சொந்தமானதல்ல; மகாத்மாக்களைத் தந்துள்ள எல்லா மதங்களுக்கும் அது சொந்தமானதாகும்.''
- சுவாமி விவேகானந்தரின் சிகாகோ பிரசங்கத்திலிருந்து...

இப்படித்தான் இருக்கிறதே பொழிய கார்ல் மார்க்ஸின் கருத்துக்கள் ஒன்று கூட இடம்பெறவில்லை. SFI யின் இந்தச் செயல் இடது கம்யூனிஸ்ட் தலைமைக்குக் கொஞ்சம் அதிர்ச்சியைக் கொடுத்துள்ளது. ஆனால் அரசியல் பார்வையாளர்களோ SFI யினர் கொஞ்சம் விசாலமாகச் சிந்திக்கத் தொடங்கியுள்ளார்கள் என்று கருதுகிறார்கள்.

– எஸ். எஸ். மணி



# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி, பிப்ரவரி 1, 1943

### சுயராஜ்யமா? பரதநாட்டியமா?

“இந்தியா தேசத்தின் செல்வம் முழுதும் வேண்டுமா? ஷேக்ஸ்பியர் வேண்டுமா? என்று என்னைக் கேட்டால், ஷேக்ஸ்பியர்தான் வேண்டும் என்பேன்'' என்று ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர் கூறினாராம். இம்மாதிரி இன்றைய தமிழ்நாட்டில், ''சுயராஜ்யம் வேண்டுமா? பரத நாட்டியக் கலை வேண்டுமா?'' என்று கேட்டால், ''பரத நாட்டியக் கலைதான் வேண்டும்'' என்று சொல்லக் கூடியவர்கள் இருக்கிறார்கள். அவ்வளவு தூரம் பரதநாட்டியம் தமிழ்நாட்டாரின் மனதை இன்று கவர்ந்திருக்கிறது. அப்பேர்ப்பட்ட கலையை நன்றாக முறைப்படி பயின்று தேர்ச்சி பெற்றிருப்பவர்களில் குமாரி ராதாவும் ஒருவர். அடையாறு கலா க்ஷேத்திரத்தில் ஸ்ரீமதி ருக்மணி தேவியின் மேற்பார்வையில் அக் கலையைப் பயின்றவர். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற இவருடைய நாட்டியக் கச்சேரிகள் ரசிகர்களால் பெரிதும் பாராட்டப்பட்டன.




*- அட்டைப்பட விளக்கம்*

### யுத்த ஜோஸியம்

சென்னைக் கவர்னர் சமீபத்தில் தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து வரும் போது, ஜனங்களுடைய மனத்திலிருந்து ஜப்பான் பீதியைப் போக்கும்படியான ஆறுதல் மொழிகளைக் கூறி வந்தார். ''யுத்தத்தைப் பற்றி ஜோஸியம் சொல்வது முட்டாள்தனம்; ஆனால், எனக்குத் தெரிந்த வரையில் எதிரிகள் இந்தியாவுக்குள் படையெடுக்கும் சந்தர்ப்பம் மிகக் குறைவு'' என்றார். ''முக்கியமாக, சென்னை மாகாணத்துக்கு அந்த அபாயம் ரொம்பக் குறைவு'' என்றும் தைரியம் கூறினார்.

சில காலத்திற்கு முன்பு சென்னைக் கலாசாலை ஒன்றில் நடந்த விவாதப் போட்டியில் ''அலெக்ஸாந்தர் ஸிந்து நதிக் கரையிலிருந்து கிரீஸுக்குத் திரும்பிப் போயிராமல் சென்னைக்கு வந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?'' என்று ஒருவர் கேட்டாராம். அதற்கு ஆங்கில புரொபஸர் ஒருவர், ''கூவம் நதியின் நாற்றத்தினால் செத்துப் போயிருப்பார்!'' என்று பதில் அளித்தாராம். ஜப்பானியர் சென்னைக்கு வர மாட்டார்கள் என்பதற்கும் இதே காரணம் போதுமல்லவா?

*- என்ன சேதி*

### தெரிந்து கொண்டேன்

தகப்பன் : நான் நேற்றுச் சொல்லிக் கொடுத்த பரிணாமவாதத்தை நன்றாகக் கற்றுக் கொண்டாயா?



மகன் : நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறேன்.

தகப்பன் : என்ன தெரிந்து கொண்டாய்? சொல்லு பார்ப்போம்.

மகன் : நான் பிறப்பதற்கு முந்தி நீயும் அம்மாவும் குரங்காயிருந்தீர்கள் என்று தெரிந்து கொண்டேன்.

*- ஜி. கே. ராமன், காலக்ஷேபம்*

### பக்த போதனா

போதனா என்பவர் பரம பக்தர்; சிறந்த கவிஞர். இந்த இரண்டு அம்சங்களில் ஒன்று இருந்தாலே ஒரு மனுஷர் ஏழையாய்த்தானிருக்க முடியும். இரண்டும் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டுமா?

போதனாவின் சரித்திரத்தை வாஹினி பிக்சர்ஸ்காரர்கள் மிகவும் உயர்தர டாக்கியாக எடுத்திருக்கிறார்கள். பாஷை தெரியாவிட்டாலும், கதைப் போக்கை நன்றாய்த் தெரிந்து கொள்ளும்படியிருக்கிறது. போத

நிகழ்ச்சிச் சித்திரம் - உம்மன்



னாவாக நடிக்கும் ஸ்ரீ நாகையாதான் அடியிலிருந்து கடைசி வரையில் படத்தின் பெருமையையெல்லாம் கொள்ளையடிக்கிறார்!

எனக்கோ, இந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போதெல்லாம் அடிக்கடி ஓர் எண்ணம் தோன்றிக் கொண்டிருந்தது. ''ஆந்திரர்கள் தங்கள் பெரியார்களின் சரிதங்களை இவ்வளவு நன்றாய்ப் படம் எடுக்கிறார்களே? தமிழ் டாக்கிக் காரர்கள் மட்டும் தமிழ்ப் பெயர்களின் புனித சரித்திரங்களை ஏன் இப் படிக் கொலை செய்கிறார்கள்?'' என்னும் நினைவு மனதை உறுத்திக் கொண்டேயிருந் தது.

* தண்டபாணி தேசிகர்



சில மாதங்களுக்கு முன்பு ''நந்தனார்'' தமிழ்ப் படம் ஒன்று வெளியாயிற்று. இந்தப் படத்தில் பரம பக்தனாகிய நந்தனைக் கள்ளுப் பானைக்குள்ளேயே போட்டு முழுக்கி எடுத்திருந்தார்கள்! படம் நெடுக, கள்ளின் மகிமையும் களியாட்டமுமாகவே இருந்தது. ''உயரச் சிகரக் கும்பம் தெரியுதாம்!'' என்று நந்தன் பக்திப் பரவசமடையும் இடத்தில், யாராவது கோவிலையும் கோபுரத்தையும் நினைத்துக் கொண்டு விட்டால் என்ன செய்கிறது என்று, தென்னை மரத்து உச்சியில் தொங்கும் கள்ளுப் பானையை ஞாபகப் படுத்தியிருந்தது!

இந்தப் படத்தில் நந்தனாக நடித்தவர் ஸ்ரீ தண்டபாணி தேசிகர். கல்லுங் கனியுமாறு பாடக் கூடியவர். அவ்விதமே பாடியிருக்கிறார்; உணர்ச்சி ததும்ப நடித்திருக்கிறார். ஆனால், என்ன பிரயோஜனம்? ஸ்ரீ தண்டபாணி தேசிகர் கன்னத்தில் போட்டுக் கொள்வது போல் சென்னைச் சுவர்களில் ஒரு விளம்பரப் படம் ஒட்டியிருந்தது. இது எவ்வளவு பொருத்தம் என்று டாக்கியைப் பார்த்த பிறகுதான் எனக்குத் தெரிந்தது. ''இவ்வளவு ஆபாசங்களுக்கிடையில் நான் நந்தனாக நடித்தேனே, அது தப்பு, தப்பு!'' என்று தேசிகர் கன்னத்தில் போட்டுக் கொள்ள வேண்டியது ரொம்ப அவசியந் தான்.

* நாகையா



- ஆடல் பாடல் - கர்நாடகம்

# ரசிக்கும் படியான குறும்புத்தனம்!

## சரியான சவுக்கடி!

◆ ''சாதுக்கள் சாம்ராஜ்யம்...'' தலையங்கம் மதத்தின் துணை கொண்டு குளிர்காய நினைக்கும் அரசியல் கபட வேடதாரி களுக்குச் சரியான சவுக்கடி.

ஈரோடு - 4, ரேவதிப்ரியன்.

## ஆணித்தரம்!

◆ மதவெறியர்களிடம் ஆட்சி சிக்கினால், நாட்டின் ஒற்றுமை சீர்குலைந்து, அமைதி அழிந்து, பொருளாதாரச் சீரழிவினால் நாடு சின்னா பின்னமாகி விடும் என்பதை ஆணித்தரமாகச் சுட்டிக் காட்டியது, தலையங்கம்!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

## நெகிழவைத்த நிஜம்!

◆ உலகத்தையே சினிமாவின் மூலம், சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்த சார்லி சாப்ளினுடைய நிஜ வாழ்க்கையின் பின்னால் இருந்த நிஜத்தைப் படித்ததும் நெஞ்சம் நெகிழ்ந்தது.

செம்பொன்னார்கோயில், எஸ். வி. ஏ. பிரகாஷ்.

## விசேஷப் பாராட்டு!

◆ பொங்கல் சிறப்பிதழில் வெளியாகியிருந்த கதைகள் அனைத்தும் சிறப்புச் சிறுகதைகளோ என வியக்கும்படி மிகப் பிரமாதமாக இருந்தன. சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வரும் கல்கிக்கு என் விசேஷப் பாராட்டுக்கள்.

தக்கோலம், அ. முஸ்தபா.

## பக்கத்துக்குப் பக்கம் சுவை!

◆ பொங்கல் சிறப்பிதழ் பக்கத்துக்குப் பக்கம் சுவை! ஜோக்ஸ் அனைத்தும் அமுதம்!

திருவானைக்காவல், பத்மாபஞ்சவர்ணம்.

## மௌனமே ஒரு கட்டுரை!

◆ ''ஜெ. ஆட்சி எப்படி?'' என்பதற்கு வசனமில்லாமலேயே மக்கள் நடித்து, அருமையாக விமர்சித்த விதம் பாராட்டுக்குரியது. சபாஷ்!

திருச்சி, தி. மா. தமிழமுகன்.

## உண்மையிலேயே தமாஷ்!

◆ தமாஷ்வாலா எழுதிய 'பந்தும் பந்துக்களும்' சிறுகதை உண்மையிலேயே தமாஷாக இருந்தது.

திருச்சி - 20, சரசுவதி பஞ்சு.

## 'கடி' என்றாலும் பிரமாதம்!

◆ ''கடிக்கக் கொஞ்சம்'' என்ற தலைப்பில் தொகுத்தளித்த சில கடி ஜோக்குகளைப் படித்தேன். கடி ஜோக் என்றாலும் கவலையை மறந்து சிறிது நேரம் சிரித்து மகிழும் ஜோக்குகளாக அமைந்திருந்தன. அதிலும் அந்த போலீஸ் நாய் ஜோக் உண்மையிலேயே டாப்!

லால்குடி, எம். இராஜேந்திரன்.

## நெத்தியடி!

◆ 'வர்மா கமிஷன் தீர்ப்புக்கு, கவர்னர் ராஜினாமா செய்வாரா?' என்ற கேள்விக்குத் தராசின் பதில் செம நெத்தியடி! கல்கிக்கு முன்னால் கவர்னர் என்ன அரசியல்வாதி என்ன, எல்லாமே ஒன்றுதானே!

கும்பகோணம், புலவர். எஸ். கே. மூர்த்தி.

## எங்கள் சார்பில் உங்கள் கேள்வி!

◆ மீராவைப் பற்றி நாங்கள் கேட்க நினைத்த கேள்விகளை எங்கள் சார்பாக நீங்கள் கேட்டதற்கு நன்றியோ நன்றி!

நெல்லிக்குப்பம், எஸ். எஸ். ஆர்.

## ரசிக்க வைத்த குறும்புத்தனம்!

◆ TV மர்சனம், ஜோக்ஸ், சினிமா விமர்சனம், கடி ஜோக்ஸ், சிறுகதைகள், கார்ட்டூன், கட்டுரை என அனைத்து அம்சங்களின் இறுதியிலும் தனது தலையை நுழைத்து நையாண்டி செய்த ஜில்லு-ஜானுவின் குறும்புத்தனம் ரசிக்கும்படியாக இருந்தது.

திருவட்டார், தா. சிந்துகுமார்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



''இந்த ட்ரெஸ்ல நான்
எங்க அம்மா மாதிரி
எவ்வளவு அழகா
இருக்கேன்!
அம்மா மாதிரி நானும்
ஒரு பெரிய ஆபிஸரா
ஆகப்போறேன்!!''
இந்த பிஞ்சு உள்ளத்தில் தஞ்சம்
கொண்ட கனவுகளை நனவாக்க
சிட்டி யூனியன் வங்கி தரும்
'வாமன விஸ்வரூபா
டெபாஸிட்' திட்டம்.
உங்கள் தேவைக்கேற்ற இதர
சேமிப்புத் திட்டங்கள்:
■ சேமிப்புக் கணக்கு
■ மாதாந்திர சேமிப்புத் திட்டம்
■ ரொக்கப் பத்திரங்கள் (கூட்டு வட்டி விகிதம்)
■ வாமன விஸ்வரூபா டெபாஸிட் (கூட்டு வட்டி விகிதம்)
■ பிக்ஸட் டெபாஸிட்
■ அயல்நாட்டில் வசிக்கும் இந்தியருக்கான சேமிப்புத் திட்டங்கள்
■ CUB ஸ்டாக்இன்வெஸ்ட்
CUB
CUB
சிட்டி யூனியன் பாங்க் லிட்.,
(அன்னியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி)
பதிவு அலுவலகம்: கும்பகோணம் 612 001.
சிட்டி யூனியன் பாங்க்:
வளர்ச்சிக்கு - உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி!
MCS/CUB/802/4

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka


# ''சொட்டு நீலத்துடன்'' வழங்கப்படும் இலவசப் பரிசுகள் என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன் தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு ''துளிகளே'' போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

**உபயோகிப்பவர்களுக்கு.**

ORAL TOXICITY TEST ... SKIN IRITATION TEST




**JYOTHY LABORATORIES**

Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.

Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா